

अनुचर शक्त्यादि गुणाम् अग्रेसर बोधविरचितालोकाम् ।
स्वाधीन वृषगिरीशां स्वयं प्रभूतां प्रमाणयामि दयाम् ॥

அநுசரசக்த்யாதி குணாம் அக்ரேஸர போதவிரசிதாலோகாம்
ஸ்வாதீந வ்ருஷகிரீசாம் ஸ்வயம் ப்ரபூதாம் ப்ரமாணயாமி தயாம்

சக்தி முதலிய குணங்கள் எல்லாம் பின்தொடரக்கூடிய பெருமையையுடையவள். முன்னால் அறிவென்னும் விளக்கினால் வெளிச்சத்தை அடைந்து செல்பவள். திருவேங்கடமுடையானை ஸ்வாதீனமாகவுடையவள். தானே ப்ரபுவாய் இருப்பவள். இத்தகைய தயாதேவியை நான் நிரூபித்துச் சரணம் அடைகிறேன்.

— தயாசதகம்—11.

நவம்பர் 1987

# ஸப்தகிரி

இதழ் 6 மலர் 18

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

| | |
|---|---|
| முன்னட்டையில் | கீதோபதேசம் — திருமலை. |
| 2-வது | திருமலையில் புதியதாகக் கட்டப்பட்ட ஆஸ்தான மண்டபத்தினை ஆந்திர முதல்வர் திரு. என். டி. ராமாராவ் அவர்கள் திறந்து வைததபோது. |
| 3-வது | திருப்பதி அலிபிரியில் புதியதாகக் கட்டப் பட்ட விருந்தினர் விடுதியினை முதல்வர் அவர்கள் திறந்து வைத்தபோது. |
| பின்னட்டையில் | ஸ்ரீ பத்மாவதித் தாயாரும் திருவாழியும் — திருச்சானூர். |

சிறப்பாசிரியர் .
திரு. சிஎச். வெங்கடபதிராஜு
I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர் .
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
EDITOR,
" Sapthagiri "
T. T. Devasthanams,
TIRUPATI.

# செய்திச் சுருக்கம்

திருமலையில் :

அண்மையில் திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்கு எச். எம. டி. நிறுவனத்தார் ஒவ்வொனறும் ரூ. 25,000 பெறுமான மூன்று சூரிய சக்தியால் இயங்கும் கடிகாரங்களை இலவசமாக வழங்கினர். 0.7 மீட்டர் குறுக்களவு கொண்டு, மழைககாலங் களிலும கூட இயங்கும் இக்கடிகாரங் கள் அரபு எழுத்துக்களைக் கொணட தாக விளங்கும். இமமூன்றில் ஒன்று திருமலையில் கோயிலுக்கெதிரில் உள்ள ஆர்ஷ சதஸ் அரங்கிலும், மற்றைய இரண்டும் வைகுண்ட தோரணத் திறகு இருமருங்கிலும் வைக்கப்படும்.

ஃ

அண்மையில் திருமலையில் ஸ்ரீவேங் கடேஸ்வர சுவாமி கோயிலின் வரு டாந்திர பிரம்மோதசவம் வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட் டது. 30-9-87 அன்று நடைபெறற கருட சேவைககும், 2-10-87 அன்று நடைபெற்ற தேர்த்திருவிழாவிற்கும் ஆயிரக்கணக்கில் யாத்திரிகர்கள் திரு மலைக்கு வருகை புரிநதனர். இப் பத்து நாள் பிரமமோத்சவத்தின் போது திருமலை சதஸ் அரஙகில் காலை மாலை நேரங்களில் இன்னிசைக கச் சேரிகளும், சமயச சொற்பொழிவு களும் நடைபெற்றன. இப்பிரம் மோத்சவத்தின்போது கோயில் வரு மானம் சுமார் ரூ 1 09 கோடி ஆகும். உண்டியல் மூலமாக ரூ. 58 இலட்ச மும், லட்டு, வடை பிரஸாதங்களின் விற்பனை மூலம் ரூ. 28 இலட்சமும், ரூ. 25/- டிக்கெட் விற்பனை மூலம் ரூ. 25/- இலட்சமும் இத்தொகையில் அடங்கும். பிரமமோதசவத்தின் இறுதி நாளனறு கோயில் வருமானம் ரூ. 18 இலட்சம் என்பது குறிப்பிடத் தக்கது. இதுபோது சுமார் 4 இலட் சம் யாத்திரிகர்கள் திருமலைக்கு வருகை புரிந்தனர்.

ஃ ஃ ஃ

திருமலையில் ரூ. 2 கோடி செலவில் கட்டப்பட்ட ஆஸ்தான மண்டபத் தினையும், ரூ. 40 இலட்சம் செலவில் கட்டப்பட்ட நாராயணகிரி 3வது புதிய விருந்தினர் விடுதியினையும், திருமலைக் கோயிலில் அணமையில் பழுதுபார்க்கப்பட்ட ஐநமஹால் எனும் கண்ணாடி அரங்கினையும் ஆந் திர மாநில முதல்வர் திரு. என் டி. ராமா ராவ் அவர்கள் அண்மையில் திறந்து வைத்தார். மேலும் பிரம் மோத்சவ கருடசேவை யன்று, மூல வருக்கு ஆந்திர மாநில அரசு சார்பில திரு. என். டி. ராமாராவ் அவர்கள் பட்டு வஸ்த்ரங்களை வழங்கினர்.

திருப்பதியில .

ரூ. 10 கோடி செலவில் திருப்பதி அருகே ஸ்ரீவேஙகடேஸ்வரா உயிரியல் மறறும் தாவரயியல் பூங்கா ஒன்று சுமார் 1 இலட்சம் ஏக்கர் நிலப்பரப் பில் உருவாக்கப்பட உள்ளது. ஆந் திர மாநிலத்திலேயே பெரிய அளவில விளங்க இருக்கும் இப்பூங்காவிற்கு அண்மையில் ஆந்திர மாநில முதல் வர் திரு. என். டி. ராமாராவ் அவர் கள் அடிக்கல் நாட்டினர்.

ஃ ஃ

திருப்பதி 'அலிபிரி' டோல்கேட் வரை விளங்கும் திருப்பதி சுற்றி யுள்ள சுற்று வழிப்பாதையான சுமார் 3 கி.மீ. பாதையில் ரூ. 20,000 செல வில் 2400 மரங்கள் நடும் பணியினை அண்மையில் ஆந்திர மாநில அற நிலையத் துறை அமைச்சர் திரு. சிம் மாத்ரி சத்யநாராயணா அவர்கள் தி.தி.தே. சார்பில் துவக்கிவைத்தார்.

மற்றைய செய்திகள் :

ஸப்தகிரி மற்றும தி. தி தே. நூல் வெளியீடுகளின் விற்பனையை உயர்த் திடும் வகையில், தி. தி. தேவஸ் தானம் விரைவில் 'ஸப்தகிரி' விற் பனைப் பிரதிநிதிகள் மற்றும் சில புகழ் பெற்ற நூல் வெளியிட்டார்கள் பங் கேற்கும் வகையில் கருத்தரங்கு ஒன்று திருப்பதியில் கூட்டப்படும்.

ஃ ஃ ஃ

திருமலை மற்றும் திருப்பதி விடுத்து நாட்டில் உள்ள மற்றைய தி. தி. தேவஸ்தானத்தாரின் சத்திரங்களின் நிருவாகப் பொறுப்பினை மட்டும் அவ்வவ்வூர்களில் உள்ள கோயில் மேலாண்மைக்கு விடுவதென்று தீர் மானிக்கப்பட்டுள்ளது.

ஃ

திருமலையிலிருந்து அப்புறப்படுத் தப்பட்டு, திருப்பதி நகரத்திற்கு அருகே செருலோபல்லி பஞ்சாயத் தைச் சார்ந்த தாட்டி தோப்பு எனும் கிராமத்தில் குடியமர்த்தப்பட்ட சுமார் 300 குடும்பங்களைச் சார்ந்த 200 சிறுவர்கள் பயனுறும் வகையில் தி. தி. தேவஸ்தானம் தன் பொறுப் பில் 5 வகுப்புகளைக் கொண்ட ஆரம் பப் பள்ளி ஒன்றினை நடத்துவதென்று முடிவு செய்யப்பட்டுள்ளது.

ஃ

தி. தி. தேவஸ்தானத்தின் திருப் பதி உதவி செயலாட்சித் தலைவராக, ஆந்திர மாநில அறநிலையத்துறையி லிருந்து திருமதி. அருணகுமாரி அவர் கள் புதியதாக பதவி ஏற்றுள்ளார்.

ஃ ஃ ஃ

ஆந்திர மாநில வரங்கல் மாவட்ட இணை ஆட்சியாளரான திரு. ரமேஷ் குமார் ஐ.ஏ.எஸ். அவர்கள் தி. தி. தேவஸ்தானத்தின் இணை செய லாட்சித் தலைவராக பதவி ஏற்றுள் ளார்.

## காலமானார்

தி தி. தேவஸ்தான சமய நூல் வெளியீடுகளின் தலைமை ஆசிரியராக பணிபுரிந்து வந்த திரு.வித்வான் விஸ் வம் அவர்கள்(வயது 73)தமது இல்லத் தில்19-10-87 அன்று காலமானார் என் பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம். பல ஆண்டுகள் 'ஆநதிர பிரபா' பத்திரிகையின் ஆசி ரியராக இருந்து ஓய்வு பெற்ற அவர் பல வட மொழி நூல்களை தெலுங் கில் மொழி பெயர்த்துள்ளார். திரு. விஸ்வம் அவர்கள் சிறந்த கவி ஞரும், எழுத்தாளரும், பத்திரிகை ஆசிரியருமாவார்.

# அநவரத ராமகாதமருத சேவகன்

நான் பிறந்து என் பெற்றோர்களுக்கு எந்தப் புகழ் கொடுத்தேனோ அறியேன். ஆனால் இரகுநாதன் பிறந்ததாலேயே நான் பெரும் புகழ் பெற்றேன்'—என்று கூறி பெருமிதம் அடைந்தான் தஞ்சை நாயக்க மன்னன் அச்சுதப்பன். இது முற்றிலும் உண்மையான வரலாறு. தன் வாழ்நாள் முழுதும் இராம காவியத்திலேயே திளைதது, எங்கெல்லாம் அறத்திற்கு ஊறு விளைகின்றதோ அங்குச் சென்று அதனைக் களைந்து இராமனின் சேவகனாகவே வாழ்ந்து காட்டியவன் தஞ்சை மன்னன் விஜய இரகுநாத நாயக்கன்.

குடவாயில் பாலசுப்ரமணியன்

கோவிந்த திட்சிதரை தன் ஆசானாகவும், மதி அமைச்சராகவும் கொண்டு சோழ மண்டலம் முழுதும் ஆண்ட இப்பெருமகன் மாவீரன், இசைவாணன், கவிஞன், கலைஞன் என்ற பெருமைகளோடு சிறந்த இராம பக்தனாகத் திகழ்ந்தவன். விஜய நகரப் பேரரசில் வேங்கடபதி ராயருக்குப் பின்பு, ஜக்கராயனின் சூழ்ச்சியால் ஸ்ரீ ரங்கன் கொல்லப்பட்டு குழப்பம் விளைந்தபோது, முறையான வாரிசான இராமராயன் என்ற சிறுவனை யாசம நாயக்கன் என்ற அமைச்சன் ரகசியமாக காத்துப் பேரரசிற்கு முடிசூட்ட முயன்றான். அப்போது அறத்திற்கே துணை போகும் இரகுநாத நாயக்கன் யாசமனுக்கும் சிறுவன் இராமராயனுக்கும் துணை நின்று ஜக்கராயனைப் போரில் விழ்த்தி, இராமராயனுக்குக் கும்பகோணத்தில் பட்டாபிஷேகம் நிகழ்த்தி, விஜய நகர பேரரசைக் காத்து நின்றான். இராமன் இலங்கை சென்று வென்றது போன்று இரகுநாதனும் யாழ்ப்பாணம் சென்று பெரு வெற்றி அடைந்தவன்.

கும்பகோணத்தில் இராமராயனுக்குப் பட்டாபிஷேகம் செய்ததின் நினைவாக இராகவப் பெருமானுக்குப் பட்டாபிஷேகக் கோலத்திலேயே கோயில் எடுத்தான். இந்த இராமசாமி கோயிலினுள் அயோத்தி அண்ணல் அறத்தை, பரம தத்துவத்தை எடுத்துரைக்கும் ஆசானாகத் திகழ, அருகே மிதிலைச் செல்வி அமர்ந்திருக்க, இளவல் இலக்குவன் வணங்கி நிற்க, பரதன் கொற்றக் குடையும், சத்ருகன் கவரியும ஏந்தி நிற்க, எதிரே அனுமன் ஓலைச் சுவடி ஓர் கையில் கொண்டு,மறு கையால் யாழ் இசைக்கும் கோலத்தில் அருள்பாலிக்கின்றனர். அனுமன் ஏநதியுள்ள யாழ் விஜய ரகுநாதன் கண்டுபிடித்த 'இரகுநாதேந்திர வீணை' என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இராமனாகவே வாழ்ந்து காட்டிய இரகுநாத நாயக்கனின் முழு வரலாற்றை சம்ஸ்கிருதத்தில் 'இரகுநாதப்புதயமு' என்ற நூலில் இராம பத்ராம்பா என்ற பெண்பாற் புலவர் சிறப்பாகக் கூறியுள்ளார். இதே போனறு விஜய ராகவ நாயக்கர் தன் தந்தையின் வரலாற்றைத் தெலுங்கு மொழியில் 'இரகுநாத நாயக்கப் புதயமு' என்று இரண்டு நூல்களில விவரித்துள்ளார். யக்ஞ நாராயண தீட்சிதர் (கோவிந்த தீட்சிதரின் மகன்) 'சாகித்ய ரத்னாகரம்' என்ற நூலில இரகுநாதனின் வரலாறு பேசுகிறார். இவ்வனைத்து நூல்களும இரகுநாதனை நாள்தோறும் இராம காவியத்தைக் கேட்டு, திளைத்து மகிழ்பவன் என்று கூறுகின்றன. இராமாயண விரிவுரை கூறும் புலவர்களுக்குத் தன் கையாலேயே தாம்பூலம் அளித்து மகிழ்வானாம். தன்னை 'அநவரத ராம காதம்ருத சேவகன்' என்று கூறிக் கொள்வதில் பெருமை காண்பானாம்.



விஜய இரகுநாத நாயக்கன்

கும்பகோணம் இராமசுவாமி திருக்கோயில் போன்று இம்மன்னவனின் உள்ளம் கவர்நத திருக்கோயில் திருக்கண்ண மங்கை பக்தவத்சல பெருமாள் திருக்கோயிலாகும். இரகுநாதன் இத்திருக்கோயிலுக்கு அளித்த அறக்கொடைகள் ஒன்றல்ல இரண்டல்ல...! இவனது ஆட்சியில் கண்ண மங்கையாம் திருக்கோயில் கற்றளியாக எடுக்கப்பட்டு கி. பி. 1621-ல் பக்தவத்சலனின் மகா பிரதிஷ்டை செய்யப்பட்டது என்பதை உண்ணாழியில வெட்டப்பட்டுள்ள சம்ஸ்கிருத கல்வெட்டு விவரிக்கின்றது. இக்குடநீராட்டு விழாவிற்கு முன்பே கி. பி. 1608ஆம் ஆண்டு சௌமிய வருடம் பங்குனி மாதம் பதினெட்டாம் நாள் செவ்வாய்க் கிழமை ஸ்ரீராம நவமியன்று இரகு



செப்போவியம்

நாத நாயக்கன் இத்திருக்கோயிலுக்கு விஜயம் செய்து திருப்பணிகள், நந்தவனம், திருவிளக்குகள், புனிதத் திருமஞ்சனம், பூஜைகள் போன்றவைகளுக்காக 60 வேலி நிலம் சர்வமானியமாக சன்னதியில் எம்பெருமான் முன்பு தாரை வார்த்து அளித்தான்.

இப்புனித நிகழ்ச்சியை நாம் கல்வெட்டாக இருந்தால் படிக்கலாமே தவிர காண முடியாதே! இதைக் காட்சியாக நமக்குக் காட்ட நினைத்தான் தஞ்சையைச் சேர்ந்த லட்சுமண ஆச்சாரியின் மகன் வெங்கிடாசல ஆச்சாரி. சுமார் 85×25 செ.மீ. உள்ள ஒரு செப்புத் தகட்டில் அன்று (கி. பி. 1608ல்) இராம நவமியன்று பக்தவத்சல பெருமானின் சன்னதியில் இரகுநாதன் அறக்கொடை அளித்ததைக் கண்ட வெங்கிடாசல ஆச்சாரி அக்காட்சியை அப்படியே ஓவியமாக வடித்தான். அது மட்டுமின்றி அன்று நிகழ்ந்த சிறந்த வரலாற்றுச் செய்தியையும், சாசனத்தையும், தல மகாத்மியத்தையும் அதே செப்பேட்டில் எழுதிக் கொடுத்தான்.

புகழ் வாய்ந்த இச்செப்பேடு நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இதன் முதல் பகுதி ஓவியக் காட்சி, இரண்டாம் பகுதி தஞ்சை நாயக்கர்களைப் பற்றியது. மூன்றும் பகுதி ஸ்தல மகாத்மியம், நான்காம் பகுதி இரகுநாதன் அளித்த 60 வேலி நிலம் பற்றிய சாசன விவரங்கள் அடங்கியதாகும்.

ஓவியப் பகுதி மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதல பிரிவில் திருக்கண்ணமங்கை பெருமான் ஆழியும் சங்கும் கொண்டு நடுவே நிற்க, இருபுறமும் தேவியரும், வலப்புறத்தில் இலக்குமிதேவி 'அபிஷேக வல்லி'த் தாயாராகவும், இடப்புறத்தில் நின்ற கோலத்தில் ஆண்டாளும் செப்பேட்டு ஓவியமாகக் காட்டப்பட்டுள்ளனர்.

இதன் கீழ்உள்ள இடைப் பகுதியில் காளிங்க நர்த்தன கிருஷ்ணன் நடுவே நிற்க, இடப்புறத்தில் நம்மாழ்வாரும், நான்முகனும், வலப்புறத்தே மான் மழுவேந்திய சிவபெருமானும் சூரியனும் தேவர்கள் சூழ எம்பிரானைத் துதிக்கும் கோலத்தில் காட்டப்பட்டுள்ளனர். இதனை அடுத்து கீழ்பகுதியில் நடுவே கருடத்துவஜமும், அதன் இடப்புறத்தில் மன்னன் விஜய இரகுநாத நாயக்கன் கூப்பிய கரங்களுடன் நின்ற நிலையிலும், அவனது எதிரில் கோவில் பட்டர் பூரண கும்பம் ஏந்தி எதிரே வரவேற்கும் காட்சியும், அவர்கள் அருகே மற்ற பட்டர்களும், அமைச்சர் மற்றும் வீராகளது உருவங்களும் வடிக்கப்பட்டுள்ளது. ஓவியப் பகுதிக்கு கீழே 'ஸ்ரீராம நீவே கதி, ஸ்ரீராம ஜெயம்'—என குறிக்கப்பட்டுள்ளது.

செப்பேட்டின் இரண்டாம் பகுதியில் நாயக்க மன்னர்களின் பட்டங்களும், வமிச வரிசையும் கூறப்பட்டுள்ளது. மூன்றும் பகுதியான ஸ்தல மகாத்மியத்தில் திருபாற்கடலைத் தேவேந்திரனும் முப்பத்து முக்கோடி தேவர்களும் மகாமேருவையும் ஆதிசேஷனையும் கொண்டு கடையும்போது

(42ம் பக்கம் பார்க்க)

# வால்மீகி திருவுள்ள விளக்கு

## ஸ்ரீ காஞ்சீ காதி அனந்தாசார்யஸ்வாமி அருளிய வால்மீகி பாவ தீபத்தின் மொழிபெயாப்பு

இக்கொள்கையும் பாராசர்ய விஜயத்தில் கூறப்பட்டுள்ளது. அங்குள்ள நூற்பகுதி மேலே காண்க— "'பகவானே ப்ரஹ்மத்தைப் பற்றி அறிவிக்க வேண்டுகிறேன்' என்றதனுல் மோக்ஷமடைய விரும்புமவர் உபாஸிக்கத்தக்க ப்ரஹ்மம் எதுவென்று கேட்கப்பட்டவளவில், உலகின் உற்பத்திக்குக் காரணம் ப்ரஹ்மமென்று விடை கூறப்பட்டதாகில் சிஷ்யனுக்கு உலகின் இருப்புக்குக் காரணம் வேறொன்று இருக்கும் போலுமென்று ஸந்தேஹம் வந்து, இருப்பின் காரணமும் பிறப்பின் காரணம் போல் தனக்கு வேண்டிய குணங்களை மட்டும் கொண்டுள்ளதாகையாலும் பிற குணங்களில்லாமையாலும் தனக்கு மேலெல்லையில்லாத பெருமையையுடையதன்று; ஆகையால் உபாஸிக்கத் தக்க பூர்ணமான குணமுடைய ப்ரஹ்மம் வேறொன்று இருக்கக் கூடுமோ என்று ஸந்தேஹம் வந்து, கடைசியில் 'இதுதான் உபாஸிக்கத் தக்க ப்ரஹ்மம்' என்ற நிச்சயமே உண்டாகாது போய்விடுமென்று ச்ருதியில் மூன்றும் சேர்ந்தே லக்ஷணமென்னும் கருத்தினுல் மூன்று தடவைகள் 'எதனுல்' 'எதனுல்' 'எதனில்' என்று சொல்லியிருந்தாலும் அவற்றிற்கு ப்ரதி நிர்த்தேசமாக (=எதிர்க் குறிப்பாக) 'அது ப்ரஹ்மம்' என்று ஒரே தடவை 'அது' என்று சொல்லப்பட்டது. அந்த ச்ருதியைப் பின்பற்றியே 'ஜந்மாதி அஸ்யயத:' என்று ஸூத்ரத்திலும் உலகப் பிறப்பிருப்பிறப்புக்கள் எதனுல் உண்டாகின்றனவோ அது ப்ரஹ்மம் என்று மூன்றும் சேர்ந்தே ப்ரஹ்மத்தின் லக்ஷணமாக வியாஸ பகவானுல் கருதப்பட்டது — என்று வேறு சிலர் அருளிச்செய்கின்றனர்" என்பதே அந்நூற்பகுதி.

தனித்தனியே 'ஒவ்வொன்றும் லக்ஷணமென்பதும் மூன்றும் சேர்ந்தே லக்ஷணமென்பதுமாகிய இவ்விரண்டு கொள்கைகளும் ஸ்ரீ வேதாந்த தேசிகரால் அதிகரண ஸாராவளியில் (ச்லோ 38) தொகுத்தருளிச் செய்யப்பட்டுள்ளது—"இம்மூன்றில் ஒவ்வொன்றே ப்ரஹ்ம லக்ஷணமென்று கூறுதல் நனறு; ஒன்று மட்டுமே ப்ரஹ்மத்தைப் பிறபொருள்களெல்லாவற்றைக் காட்டிலும் வேறுபட்டதாக அறிவிக்கவல்லதாகையால். இங்ஙனமிருக்க மூன்றையும் லக்ஷணமாகக் கூறியது சிஷ்யனுடைய அறிவில் பெருமையை உண்டாக்குவதற்காகவே என்க. மூன்றும் சேர்ந்தே ப்ரஹ்ம லக்ஷணமென்றும் சிலர் கூறுவர். அதற்குப்பயன்-உலகப் பிறப்பின் காரணம் ஒரு ப்ரஹ்மம், இருப்பின் காரணம் இன்னொரு ப்ரஹ்மம், நாசத்தின் காரணம் மற்றொரு ப்ரஹ்மம்' என்று பிறமதத்தவர் சொல்லக் கேட்ட சிஷ்யனுக்கு 'அவர் கொள்கைதான் உண்மையாயிருக்குமோ' என்று ஸந்தேகம் வராமல் 'மூன்று காரியங்களையும் செய்வது ஒன்றே. அதுவே ப்ரஹ்மம். அது நாராயணன்தான்' என்று நிச்சயமுண்டாக்குதலேயாம்" என்பது காணத்தக்கது.

இவ்விஷயம் அறியத்தக்கது—உலகப் பிறப்பின் காரணமாயிருத்தல் முதலிய மூன்றில் ஒவ்வொன்றே ப்ரஹ்மத்திற்குப் பிற பொருள்கள் அனைத்தைக் காட்டிலும் வாசியுள்ளமையை அறிவிக்க வல்லதாகையால் லக்ஷணமாகலாம். ஆயினும் உலகப் பிறப்பிருப்பிறப்புக்களாகிய ஸமுதாயத்தின் காரணமாயிருத்தலென்னும் லக்ஷணத்தில் குற்றமேதுமில்லை; அதுபோலவே இதுவும் ஒரு லக்ஷணமாவதற்குத் தடையில்லாமையால். ஐயா ஸமுதாய காரணத்வத்தில் பிறப்பு இருப்பு இறப்பு ஆகிய ஒவ்வொன்றின் காரணத்வமும் அடங்கியதல்லவா? அங்ஙனம் அடங்கிய ஏதாவதொன்றின் காரணத்வமே ப்ரஹ்மத்தைப் பிறவற்றில் நின்றும் வேறுபட்டதாக அறிவிக்க ஆற்றல் படைத்ததாயிருக்க, மற்ற இரண்டின் காரணத்வங்கள் அதில் அடங்கியிருப்பது பயனற்றதாகி விடுமே என்று கூறுதல் பொருந்தாது; ஸமுதாய காரணத்வத்தில் ஒவ்வொன்றின் காரணத்வம் அடங்காதாகையாலென்க. ஏனெனில் — 'ப்ரஹ்மம் உலகப் பிறப்பின் காரணம் உலக விருப்பின் காரணம் உலக நாசத்தின் காரணம்' என்றிவ்வாறு லக்ஷணம் கூறினுல் இது தன்னில் ஒவ்வொன்றின் காரணத்வமும் அடங்கியுள்ளதென்று கொள்ள முடியும். நாம் அப்படிக் கூறவில்லை. பின்னை எப்படியென்னில்—'காரணம்' எனபதை மூன்று தடவைகள் சொல்லாமலிருக்கும் எளிமையை நோக்கி 'உலகப் பிறப்பிருப்பிறப்புக்களாகிய ஸமுதாயத்தின் காரணம் ப்ரஹ்மம்' என்று கூறுகிறோம். ஆக இதன் கண் உலகப் பிறப்பும் இருப்பும் இறப்பும் ஆகியவை காரணம் என்பதனோடு தனித்தனியாகச் சென்று சேராமல் ஸமு

தமிழாக்கம் :
திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்.
சிரோமணி வித்வான்
திருப்பதி

தாயத்வம் (=கூட்டமாயிருத்தல்) என்ற தன்மையை முன்னிட்டுக் கொண்டே சென்று சேருவதனல், ஸமுதாய காரணத்வமென்னும் இந்த லக்ஷணத்தில் ஒவ்வொன்றின் காரணத்வம் அடங்கவில்லையென்று கொள்ளத்தக்கது. அது நன்றே; ஏதாவதொன்றின் காரணத்வம் என்னும் சிறிய லக்ஷணத்தை விட்டு உலகப் பிறப்பிருப்பிறப்பாகிய ஸமுதாயத்தின் காரணத்வமென்னும பெரிய லக்ஷணத்தை ஸூத்ரகாரர் செய்தது பொருத்தமற்றதே என்று கூறவேண்டா; முற்காட்டிய சுருதி வாக்யத்தைப் பின்பற்றியே அவர் அப்படிப் பெரிய லக்ஷணத்தை கூறியதனல் எங்க. ச்ருதி தான் சிறிய லக்ஷணமிருக்கப் பெரிய லக்ஷணத்தை ஏன் கைக்கொண்டதென்னில் - ஏதாவதொன்றின் காரணமாயிருத்தலாகிய சிறிய லக்ஷணத்தைக் கொண்டால், மற்ற இரண்டின் காரணமாயிருத்தலுக்கேற்ற நற்குணங்கள் இந்த ப்ரஹ்மத்தினிடம் இல்லையென்று தோன்றி, நாம் தியானிக்கத்தக்க ப்ரஹ்மம் எதுவென்று ஸந்தேஹம் உண்டாகுமன்றோ? அப்படியில்லாமல் நாம் தியானிக்கத்தக்க ப்ரஹ்மம் உலகப் பிறப்பு உலகவிருப்பு உலகவிறப்பு ஆகிய ஸ்முதாயத்திற்குக் காரணமாயிருத்தலுக்குத் தக்க நற்குணங்கள் அனைத்தாலும் நிறையப் பெற்றதென்று தெரிவித்தற்காகவே ச்ருதி பெரிய லக்ஷணத்தைக் கைக் கொண்டதென்று அறிக— என்று.

பரப்ரஹ்மத்திற்கே உரித்தான இந்த ஜகத் காரணத்வமானது—யுத்த காண்டம் நூற்றிருபதாவது ஸர்க்கத்தில் 'எல்லாவுலகங்களுக்கும் கர்த்தாவாகவும் எல்லோரைவிட மேம்பட்டவராகவும் அறிவாளிகளுக்குள உயர்ந்தவராகவும் நீர் இருக்கிறீர்' (6) என்றும், 'எல்லாவுலகத்திறகும் ப்ரபவராகவும் (முதற் காரணமாகவும்) லயஸ்தானமாகவும் உபேந்திரனுகவும் மதுஸூதநனுகவும் நீர் இருக்கிறீர்' (17) என்றும், 'நீர் மூவுலகினையும் முதலில் படைத்த ஆதிகர்த்தாவாகவும் உலகிற்கு நீரே தலைவராய் உமக்கு வேறொரு தலைவரில்லாத சுதந்திரராகவும் இருக்கிறீர்' (20) என்றும் உள்ள இடங்களில் இராமபிரானுக அவதரித்த விஷ்ணுவுக்குச் சொல்லப்பட்டு அது அப்பிரானுக்குப் பரப்ரஹ்மத்வத்தைநிலைநாட்டுகின்றது. இம்மூன்று வசனங்களில் முதலிலும் முடிவிலும் உள்ள 'கர்த்தா' என்ற சொல்லால், பானையைப் படைக்கும் குயவன்போல் உலகத்தைப் படைக்கும் வினைமுதலாந்தன்மையும், இரண்டாமதிலுள்ள 'ப்ரபவ:' என்ற சொல்லால் 'ப்ரபவதி ஜகத் அஸ்மாத்' (=இவனிடமிருந்து உலகம் உண்டாகின்றது) என்ற வ்யுத்பத்தியின் (பதத்தைப் பகுதி விகுதிகளாகப் பிரித்துப் பொருள் கொள்ளும் வகையின்) மூலமாக, குடத்திறகு மண்போல் உலகிறகு முதற்காரணமாந்தன்மையும் விஷ்ணுவுக்கு அறிவிக்கப்படுகின்றன வென்று பகுத்துணர்க

ஸ்வாதந்த்ர்யாத்—சுதந்திரனுயிருப்பதனல்; அதாவது பிறபொருள்களின் உருவம குணம் செயலாகிய இவற்றைச் செய்வதில், யாருக்கும் வசப்படாமல் தானே சுதந்திரனுய்ச் செய்வதனல் என்பது இதன் பொருள். இத்தகைய சுதந்திரத்தன்மை பரப்ரஹ்மத்திற்கேயுரியது; சித்து அசித்து ஈச்வரன் (=அறிவுள்ள உயிர் அறிவற்ற ஜடம் கடவுள்) என்ற மூன்று தத்துவங்களுக்குள் (=வேதம் கூறும் பொருள்களுக்குள) அசித்தென்னும் ப்ரகருதி அறிவற்ற ஜடப்பொருளாகையாலே தனது உருவம் குணம் செயல் ஆகியவற்றில் சுதந்திரனை மற்றெருவனை எதிர்பார்த்திருக்குமென்பது அனைவரும் இசைந்ததாகையாலும், 'எவன் பூமியின்மேல் இருப்பவனுய் அதன் உள்ளேயும் இருக்கிறானே, எவனை பூமி அறியமாட்டாதோ, எவனுக்குப் பூமி சரீரமாகிறதோ, எவன் பூமிக்குள்ளிருந்து கொண்டு அதைத் தூண்டுகிறானே' (ப்ருஹ. 5-7-16) என்றிது முதலிய

(41-ம் பக்கம் பார்க்க)

மானுடர் ஒவ்வொருவரும் முடிவில் மரணத்தை எதிர்கொண்டே தீர வேண்டும். ஆனால் மரணத்திற்குப் பின் சுவர்க்கமோ, நரகமோ அவரவர் பாவ புண்ணிய விகிதாசாரப்படி கிடைக்கும் என்பர் நம தான்றோர். பலர் உயிர்த்திருந்த காலத்தில் பாவச் செயல் பல புரிந்து முடிவில் நரகத்தை அடைந்து அவதிப்படுங்கால் தமது செயலுக்கு (வினைக்கு) நொந்து கொள்வர் என்றும், புண்ணியாத்மாக்கள் ஸ்வர்க வாஸத்தில் ஸுகிப்பர் என்றும், புண்ணியமானாலும், பாவமானாலும் அதனதன் பலா பலன்களை மானுடர் அனுபவித்தே தீரவேண்டும், இஃது மாற்ற முடியாத நியதி என்றும் பல நூல்கள் பறை சாற்றுகின்றன. ஆகையால்

# கழுவாய்

தான் இயன்ற அளவு நற்கருமங்கள் செய்து நற்கதி பெற முயல வேண்டும் என ஆன்றோர் வலியுறுத்திக் கூறியுள்ளனர். ஆனால் இக்கலியில் பாழும் மனம் நற்கருமங்களின் பால் நாட்டம் கொள்ள மறுக்கின்றதே! செய்த பாவங்கள் ஒன்று இரண்டா!! இவற்றின் பலன் என்னவாகும் என்ற கணக்கை, முடிவு நெருங்கும் தருணம் தான் எண்ண வைக்கும்.

திரு S. சந்திரமௌலி,
திருப்பதி.

அப்படிப்பட்ட தருணத்தில்தான் தற்சமயம் அருணகிரி அகப்பட்டுக் கொண்டிருந்தான். மரணம் தின்னம் என டாக்டர்கள் உறுதியாய்க் கூறவில்லையாயினும், பிழைப்பது கடினம் என ஜாடை மாடையாக அவனது இறப்பு உறுதி செய்யப்பட்டு விட்டது வாழ்க்கை இன்னும் சில நாட்கள்தான் என்ற நிலை...

மரணப் படுக்கையில் விழுந்து கிடந்த அருணகிரியின் மனம் பாவ புண்ணிய கணக்குப்போட்டுப் பார்த்தது. புண்ணியம் வரவில் கிடைக்கவே இல்லை. செய்திருந்தால்தானே வரவில் கிடைப்பதற்கு. பணம் ஈட்டத் தான் செய்த கணக்கிலடங்கா பாவச் செயல்கள் நிழற்படம் போல கண் முன் வந்து அவனைப் பயமுறுத்தின. தனது கடந்த காலத்தில் தான் செய்த பாவச் செயல்களுக்குத் தண்டனையாக கடுமையான நரகம்தான் கிடைக்கும் என அவனுக்கே நன்கு புலப்பட்டது. ஆனால் அதன் அளவு எவ்வளவாக இருக்கும் என அறிந்து கொள்ள அவனது மனம் விழைந்தது. மானுடர்கள் செய்யும் பாவ புண்ணியங்களைக் கணக்கிட்டு யமதருமனுக்குத் தெரிவிப்பது சித்ரகுப்தனல்லவா? அவரைக் கேட்டால் தனது கணக்குச் சரியாகத் தெரியவரும் என்ற எண்ணம் அருணகிரிக்கு எழுந்தது. உடனே "ஓம நமோ சித்ரகுப்தாய நம:" என்று ஜபம் செய்யவாரம்பித்தான். தொடர்ந்து செய்யப்பட்ட ஜபமானது யமலோகத்திலிருந்த சித்ரகுப்தனின் செவிக்கு எட்டியது. ஸதா கருமமே (கடமையே) கண்ணுயிருக்கும் சித்ரகுப்தரை இக்குரல் வியப்பில் ஆழ்த்தியது. 'இஃது என்ன விந்தை! ஏனைய தேவர்களைக் குறித்துத்தான் மானுடர்கள் தவமியற்றி வரம் பல பெற்றுள்ளனர். ஆனால் இந்நாள் வரை ஒருவர் கூட தனக்காகத் தவமியற்றியதில்லை. இவன் யாரோ விசித்திர பக்தனாக உள்ளான். வரங்கள் ஏதும் தரஇயலாத தன்னைக் குறித்து தவமியற்றுகின்றானே? இவன் யார் என்று பார்ப்போம்' என எண்ணியபடி மந்திரம் வந்த திக்கை நோக்கி இறங்கி வந்தார்.

பூலோகத்தில் ஒரு பெரு நகரத்தை அடுத்துள்ள பணக்காரர்கள் வாழும் பகுதி. அதன் மத்தியில் ஆடம்பரமான பங்களா. அதனுள் அருணகிரியின் படுக்கை அறை.

சித்ரகுப்தன் வந்ததை எவரும் கவனிக்கவில்லை. டாக்டர்கள், சுற்றத்தார், நண்பர்கள் என பலரும் அருணகிரியின் கட்டிலைச் சுற்றி நின்றிருந்தனர். பணக்கார ரோகியல்லவா! கூட்டத்தார் அகன்றதும் அருணகிரியை சமீபித்த சித்ரகுப்தன் "பக்தா! நான் வந்துவிட்டேன். நீ என்னை அழைத்ததன் காரணம் என்ன?" என வினவினார். வந்தவர் சித்ரகுப்தன்தான் என உறுதி செய்து கொண்ட பிறகு அருணகிரி அவரிடம் 'ப்ரபோ! எனது கடந்த காலத்தில் நான் நற்கருமங்கள் செய்தேன் எனக் கூறிக் கொள்ள முடியாது. ஆனால் பாவச் செயல்கள் பல புரிந்துள்ளேன் என்பது மட்டும் எனக்கே நன்றாகத் தெரியும். ஆனால் அதன் அளவு எவ்வளவு? அதன் பலன் என்ன என்பது உமக்கு மட்டும்தான் தெரியும். ஆகையால்தான் அதைத் தெரிந்து கொள்ளும் எண்ணத்தில் உமக்காக ஜபம் செய்தேன்' என்றான் அருணகிரி விநயமாக.

'அப்பா அருணகிரி! நீ என்னை எதற்கு அழைத்தாய் என்று தெரியாமல் உடன் புறப்பட்டு வந்தேன். ஆகையால் உன் கணக்கைப் பரிசீலித்து, நாளை இதே நேரம் உனக்கு பதிலளிக்கிறேன்' என்று சித்ரகுப்தன் அங்கிருந்து மறைந்தார்.

மறுநாளும் சலனமற்றுப் படுத்திருந்த அருணகிரியை உறவினர்கள் வந்து பார்த்துச் சென்ற வண்ணமிருந்தனர். மிகமிக வேண்டியவர்களைத் தவிர மற்றவர்கள் வரும் போது கண்மூடிப்படுத்திருந்த அருணகிரி சித்ரகுப்தனின் வரவை ஆவலுடன் எதிர் நோக்கிக் கொண்டிருந்தான். அவர் வருவதாகச் சொல்லிச் சென்ற நேரம் நெருங்கும் சமயம் தனக்குத் தனிமை தேவை என்று டாக்டர்களிடம் கூறி, உறவினர்களையும், நண்பர்களையும், டாக்டர்களையும்கூட அப்புறப்படுத்தித் தனித்திருந்தான்.

## இன்பநிலை வழங்கும் ஏழுமலை

**கவிஞர் வெண்பாவூர் சுந்தரம்.**

ஏழுமலை யானையிவனை எண்ணிதினம் துதிப்போர்க்கு
இனபநிலை என்றும் நிலையே!
ஏற்றமுற நலங்கொடுக்கும் இடமாகும் திருப்பதியின்
எழிலார்நத வணண மலையே!

வாழுமுயிர் அத்தனைக்கும் வடவேங்க டவனருள்தான
வையமதில் காக்கும் துணையே!
வானுலக மோட்சமதை வழங்கிடவே செய்யுமநத
வலம்புரிக்கும் ஏது இணையே?

தூழுமிடர் வினைமலையைத் தூளெனவே ஆக்கிவிடும்
தூயமணி வண்ணன் அருளே!
துன்பயிருள் அகன்றிடவே துணைபுரியும் கணணனவன
சுடர்விளக்காம கீதைப் பொருளே!

வீழுமுடல் வரைக்குமுள வேதனைகள் தீர்த்துவைக்கும்
விமலனவன் தாளில் விழுவோம்!
வினைமுடிக்க கௌரவரை வென்றறத்தின் துணையிருந்த
வித்தகனை நாளும் தொழுவோம்!

சரியாகக் குறிப்பிட்ட சமயத்தில் சித்ரகுப்தன் அருணகிரியின் முன் தோன்றி, 'அப்பா அருணகிரி! உன் கணக்கைப் பரிசீலிப்பது அப்படி ஒன் றும் சிரமமான செயலாக இருக்க வில்லை. ஏனென்றால் எல்லா வரவுமே பாவ மூட்டைகள்தாம். புணணியச் செயல்கள் என்ற பதிவேட்டில் உன பெயர் காணப்படவே இல்லை. நானும் பலமுறை நன்கு பரிசீலித்துவிட்டேன். இந்த கணககுப்படி அருணகிரி என்ற உனககு நரகக்குழியில் கடும் தண டனை என்ன உணடோ அதைத்தான் யமதரும ராஜா அளிப்பார். அஃது எத்தகைய கொடுமை வாய்ந்தது என வருணிப்பது கடினம்' என்றார்.

அது கேட்டு நடு நடுங்கிப் போன அருணகிரி 'மஹா ப்ரபோ! இத் தணடனையின் அளவைக் குறைக்கும் உபாயம் ஏதாவது உளதா? தயை கூர்ந்து எனக்கதைத் தெரிவிக்க வேண்டுகிறேன்' என்றான் நடுங்கும் குரலில்.

அதற்கு சித்ரகுப்தன் 'அப்பா அருணகிரி! உன் நிலை கண்டால் எனக்கே பரிதாபமாக இருக்கின்றது. நீ இறப்பதற்குள் பலரும் போற்றித் துதிக்கும் வண்ணம் ஏதாவது புண் ணிய காரியம் செய்தால் அஃது உனது கணக்கில் பதிவாகி அதற்கு கந்த பலனை சுவர்க்கத்தில் அனு பவிக்க வழியுண்டு. ஆனால் உனது ஆயுட்காலம் இன்னும் இருபத்தி யொரு நாட்கள்தான் உள்ளன. ஆகையால இதற்குள் நன்கு ஆலோ சித்து புத்திசாலித்தனமாக நடந்து கொண்டு, எங்கள் திருச்சபைக்கு வநது சேர்' என்றுகூறி அங்கிருந்து மறைந்தார்.

அருணகிரியின் மூளை சுறுசுறுப் பாக இயங்கியது. பாவச் செயல்கள் செய்ய முற்படும்போது கைகொடுத்த யோசனைகள் தற்சமயம் உதவ மறுத் தன. முடிவில் அருணகிரிக்கு ஒரு நல்ல யோசனை தோன்றியது. அதைச் செயலாக்கத் துரிதமாகச் செயல்பட் டான்.

அவ்வூர் தேவாலயத்தின் தரும கர்த்தாவான அருணகிரி ஆலயத் திற்குச் சொந்தமான நிலங்களையும், ஆபரணங்களையும பாதுகாப்பதாகக் கூறி கபளீகாரம் செய்துள்ளான். முதல் வேலையாக அநத நிலங்களை யும், ஆபரணங்களையும் கோயில் கணக்கில் வரவு வைத்தான. கோயி லின் பின்புறம் ஒரு பெரிய குளம் உளளது. சில காலம் முன்பு வரை ஊருக்கே குடி நீா வழங்கும் நீா ஊறறாக இருந்த அக்குளம் வற்றி விட்டது. அதை மராமத்து செய்ய என்று பலமுறை ஊராரிடமிருந்து பொருள் வசூலித்து ஏப்பமிட்டுள் ளான் அருணகிரி. தற்சமயம் பராண பீதியுடன நாட்களை எண்ணிக்கொண் டிருக்கும் அவன், தனக்கு மிகவும் நம்பிக்கையானவர்கள் என்பவர் சிலரை அழைத்து, வேண்டிய பணம் கொடுத்து, உடனடியாக அந்த கோயில் குளத்தைத் தோண்டச் செய்து நீர் ஊற்று முன்போல உண டாகும்படிச் செய்தான். படிக்கட்டு களைச் செப்பனிடச் செய்தான். நாற் புறமும் இருந்த மரங்களுக்குத் தண் ணீர் ஊற்றச் செய்து மேலும் பல மரங்களின் கன்றுகளையும் பூச் செடிகளையும் நடச் செய்தான். இன்னும் எனனெனனவெல் லாமோ செய்ய வேண்டும் என எண்ணிக் கொணடிருந்த அருணகிரி யின உயிர் சித்ரகுப்தன் கூறிய கணக்குப்படி சரியாக இருபத்தி யோராம் நாள் பிரிந்தது.

யமதர்மனின் திருச்சபையில் பாரபட்சமின்றி அவரவர் பாவ புண்ணியங்கள் படிக்கப்பட்டுத் தீர்ப்பு வழங்கப்பட்டு வந்தது.

அருணகிரியின் முறை வந்தது. செய்த பாவச் செயல்களோ மலை

# சுதர்சன சக்கரம்

ஒரு சமயம் பரமசிவன் பெருஞ்சினம் கொண்டு பிரம்ம தேவனுடைய தலையை வெட்டி எறிந்துவிட்டார். அதனால் தனக்கு ஏற்பட்ட பாவததுக்குப் பரிகாரம் காண பரமசிவன பரந்தாமனை நாடி பத்ரி காசிரமம் புறப்பட்டார். அங்கு பரந்தாமன, பரமசிவனிடம் சுதாசன வழிபாட்டை விளக்கிக் கூறி சக்கரத் தாழ்வாரை வழிபடுமாறு அருளினார். பரமசிவன் கைலாயம் திரும்பிச் சென்று சக்கரத்தாழ்வாரை வழிபட்டு சர்வ தோஷங்களையும் களைந்து சந்தோஷம் அடைந்தார். தேவர்கோன் முதலான சகல தேவர்களும அச்செய்தி அறிந்து சிவபெருமானிடமிருந்து சுதர்சன வழிபாட்டை அறிந்து சக்கரத் தாழ்வாரை வழிபட்டு சர்வ சித்திகளையும் அடைந்தார்கள். சக்கரத்தாழ்வாரை சர்வ நம்பிக்கையுடன வழிபடுகின்றவர்கள் சகல நன்மைகளையும் அடைவார்கள் என்று சுதாசன சதகம் எனற நூல் சாங்கோபாங்கமாக கூறுகிறது.

திரு. ஆா. சுப்பராவ-திருககோவலூா.

யளவு. முடிவில செய்த புணணியச் செயலோ கடுகளவு.

'இவன் வாழ்நாளில் செய்த பாவ புண்ணியங்களைப்பரிசீலித்தப்பின் இவனுக்கு ஒரு மாத காலம் சுவர்க்க வாஸமும், மிகுதி காலம் நரக வாஸமும் அனுபவிக்க வேண்டுமெனத் தீர்ப்பளிக்கின்றேன். சுவர்க்கவாஸம குறைவாக உள்ளதால் முதலில் அதை அனுபவித்த பிறகு நரகத்திலடைக்க உத்தரவிடுகின்றேன்' எனத் தீர்ப்பளித்தார் யமதருமன்.

ஒரு மாத சுவர்க்க வாஸம் முடியும் தருணம், 'அருணகிரியை நரகத்திற்கு அனுப்ப வேண்டும் ப்ரபோ', என்று யமதருமனிடம் பகன்றார் சித்ரகுப்தன்.

'ஏதோ ஒன்று அவனது நரக யாத்திரைக்குத் தடையாக உள்ளதே அது என்ன?' என்று யமதருமன் வினவ...

'இறப்பதற்கு முன் அருணகிரி செய்த புண்ணிய காரியமாகிய குளம் தோண்டித்தண்ணீர் வசதி ஏற்படுத்தி மக்களுக்கு நன்மை செய்துள்ளான். அக்குளத்திலிருந்து குடிநீர் எடுத்துச் சென்று பருகி மகிழும் ஊர் மக்களின் வாழ்த்தொலியால் இவனது புணணியத்தின அளவு சற்று கூடியுள்ளது, மஹா ப்ரபோ!' என்றான் சித்ர குப்தன்.

'அப்படியானால் அவனுக்கு இன்னும் ஆறு மாதங்களுக்கு சுவர்க்க வாஸம் அளிக்கின்றேன்' என்றார் யம தருமன்.

அந்த ஆறு மாதத்திற்குள் அவன் நடச்செய்த செடிகள் மரங்களாய் வளர்த்தன. பூச்செடிகள் பூத்துக் குலுங்கவாரம்பித்தன. அம்மலர்கள் கடவுள் பூஜைக்கு உபயோகிக்கப்பட்டதால்... அவன் கணக்கில் இன்னும சிறிது புண்ணியம் வரவாக்கப் பட்டது. குளத்து நீரை புண்ணிய தீர்த்தமாய் எண்ணி ஸ்நாநம் செய்பவர்களும, அந்நீரை எடுத்துச் சென்று உபயோகிப்பவர்களும், குளக்கரையிலுள்ள மரங்களின் நிழலில் இளைப் பாறுபவர்களும், மாண்டுவிட்ட அவனுக்கு மனதார 'மஹாநுபாவன்! புண்ணியாத்மா! எந்த லோகத்திலிருந்தாலும் சுகமாக இருக்கட்டும்' என வாழ்த்தொலி முழங்கினர். தொடர்ந்த இத்தகைய வாழ்த்தொலிகள் அருணகிரிக்கு சுவர்க்கத்தில் நிரந்தரமான ஓர் இடத்தை ஏற்படுத்திக் கொடுத்தது. இனி அவன் எங்கே நரகத்திற்குச் செல்லப் போகிறான்?

இஃது கதையோ கற்பனையோ எதுவாயினும் ஆகுக. இதன் மூலம் ஒரு நுண்ணிய கருத்து நமக்கு நன்கு விளங்குகின்றது. அதாவது நாம் செய்யும் பாவ புண்ணியச் செயல்கள் ஒவவொன்றும் பதிவாக்கப்படுகின்றன அதற்குத் தகுந்த பலன் உண்டு. அவை நமது பதிவேட்டில் கண்டிப்பாகக் குறிக்கப்படும். அவற்றின் பலா பலன்களை நாம் அனுபவித்தே தீர வேணடும. இதிலிருந்து யாரும் மீள முடியாது. இக்கருத்தையே நானகு மறைகளும், புராண இதிஹாஸங்களும் வலியுறுத்துகின்றன. அருணகிரிக்குக் கிடைததைப் போன்ற வாய்ப்பு நம்முள் எத்தனை பேருக்குக கிடைக்கும். ஆகையால் தான் நற்கருமங்களை நாளை என ஒத்திப் போடாமல் இனறே, இப்பொழுதே, அதாவது கணகள் பார்க்கும் சக்தியை நன்கு பெற்றிருக்கும் போதே, வாய் நன்றாகப் பேசும் திறனைக் கொணடிருக்கும் போதே, செவிகள் நன்கு கேட்கும் திறனைக் கொண்டிருக்கும் வேளையிலேயே, கை கால்கள் அசைவுத் திறனை இழந்து விடும் முன்பே புண்ணியச் செயல்களைக் கணக்கிடாமல் செய்துவிட வேண்டும் என ஆன்றோர் நமக்குப தேசித்துள்ளனர். ஆன்றோர் சொற்படி நடத்தல் நமது கடமையல்லவா?

அதை விடுத்து வாழ்ந்திருந்த காலத்தில் பாவச் செயல்கள் பல புரிநதுவிட்டு முடிவில் அதற்குக் கழுவாய்த் தேட முயலாமல், வாழும் காலத்தே இயன்ற அளவு நற்கருமங்கள் செய்து புணணியத்தை வரவாக்க முயலுவதே பகுத்தறிவு படைத்த மானுடர்க்கழகு.



# திருமலையில் தங்கு வசதிகள்

திருமலையில உள்ள தி தி. தேவஸ்தானததாரின தங்கு வசதிகளின வாடகைக கட்டணஙகள கீழவருமாறு 1-5-87 முதல உயர்ததபபட்டுள்ளன.

| குடிலகள் வகை | வாடகை விவரஙகள (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| சிறப்பு வகை குடில்கள | ரூ. 100/- |
| டி. பி. உட்குடில்கள் | 70/- |
| டி. பி. வெளிககுடில்கள், III-வது வரிசையும சேர்த்து | |
| 'ஏ' பகுதி (வெநநீா வசதி உளளது) | 20/- |
| 'பி' பகுதி (வெநநீா வசதி இல்லாதது) | 12/- |
| வி. வி. சி. மறறும் எம. பி. சி. 31 மறறும 26 | 70/- |
| எம். பி. சி. 'ஏ' பகுதி (வெந்நீா வசதியுடன) | 20/- |
| எம். பி. சி 'பி' பகுதி (வெந்நீர் வசதி இல்லாதது) | 12/- |
| டி. பி. அறைத்தொகுதிகள் மறறும் ஏ. டி. சி. அறைத் தொகுதிகள | |
| வெந்நீர் வசதியுடன் | 15/- |
| வெந்நீர் வசதி இல்லாதது | 10/- |
| ஏ. டி. சி. கீழ்ததளம் | |
| 'ஏ' பகுதி | 30/- |
| 'பி' பகுதி | 30/- |
| எஸ். எம். சி.; எஸ. என். சி.; ஏ. என். சி ; ஜி. என் சி.; எச். வி. சி. | |
| 'ஏ' பகுதி வெந்நீர் வசதி இல்லாதது | 12/- |
| 'பி' பகுதி வெந்நீர் வசதி இல்லாதது | 12/- |
| எச் வி. டி, சி. அறைத்தொகுதிகள் (ஒவ்வொன்றும்) வெந்நீர் வசதியுடன் | 25/- |
| எச். வி. டி. சி. அறைத்தொகுதிகள் (ஒவ்வொன்றும்) வெந்நீர் வசதி இல்லாதது | 12/- |
| பெரிய அறைத்தொகுதியுடன் கூடிய எச். வி. சி. விருந்தினர் விடுதி — வெந்நீர் வசதியுடன் | 50/- |
| சிறிய அறைத்தொகுதியுடன் கூடிய எச். வி. சி. விருந்தினர் விடுதி வெந்நீர் வசதி இல்லாதது | 25/- |
| எஸ். வி. விருந்தினர் விடுதி பெரிய அறைத்தொகுதி (வெந்நீர் வசதியுடன்) | 70/- |
| எஸ். வி. விருந்தினர் விடுதி மூலை அறைத்தொகுதி | 60/- |
| எஸ். வி. விருந்தினர் விடுதி மற்றைய அறைத்தொகுதி | 50/- |
| என. ஜி. விருந்தினா விடுதி I & II | |
| மூலை அறைத்தொகுதி | 60/- |
| மற்றைய அறைத்தொகுதிகள | 50/- |
| எச். ஆா. ஜி. முழு குடில் | 250/- |
| எஸ. வி. விருந்தினா விடுதி | |
| பெரிய அறைத்தொகுதி எண, 9 மற்றும சிறிய அறைத்தொகுதி எண: 7 மற்றும் 8 | 750/- |
| பெரிய அறைத்தொகுதி எண. 1 மறறும சிறிய அறைத்தொகுதி எண: 6 | 750/- |
| சிறிய அறைத்தொகுதிகள எண· 2, 3, 4, 5, (ஒவ்வொனறும்) | 250/- |
| ஸ்ரீநிகேதன (ஒவவொரு அறைத்தொகுதி) (எஸ. பி. நகர் விருநதினர் விடுதி எண. 4) | 250/- |
| இந்திரா விருந்தினா விடுதி (ஏ. சி.) ஒவவொரு அறைத்தொகுதி (எஸ். பி. நகர் விருந்தினர் விடுதி எண. 2) | 250/- |
| பாலகுடீரம் (ஏ.சி.) ஒவ்வொரு அறைத்தொகுதி (எஸ். பி. நகா விருந்தினா விடுதி எண்: 3) | 250/- |
| கோகுலம் (ஏ. சி.) | 500/- |
| டி. பி. சி. மற்றும் ஏ. டி. சி. குடில்களில் முதல்தளம் முழுப்பகுதி | 60/- |
| அரைப்பகுதி | 30/- |
| எஸ். என். விருந்தினர் விடுதி (அறைத்தொகுதி ஒன்றிறகு) | 50/- |
| ராம் பகீச்சா விருந்தினர் விடுதி (அறைத்தொகுதி ஒன்றிற்கு) | 50/- |
| திருமணக்கூடங்கள் | |
| எஸ். எம். சி. 260, 266, 267, 272 ஒவ்வொரு குடிலுக்கும் நாள் ஒன்றிற்கு | 75/- |
| ரூயா 248 | 100/- |
| கோகினேனி 226 | 100/- |
| சிதம்பரம் செட்டியார் குடில் | 125/- |
| ஏ. டி. சி. 99 | 100/- |
| டி. பி. சி. 71, 136, 152 | 75/- |
| பாலாஜி திருமண மண்டபம் | 500/- |
| சீதாராம திருமண மண்டபம் | 1000/- |

# அந்திம ஸ்ம்ருதி

இறக்கும் தருவாயில மனிதனுக்குக் கடைசியாக மனதில் தோன்றும் நினைவுக்கு அந்திம ஸ்ம்ருதி என்று பெயர். ஒருவன் எதை நினைத்துக கொண்டு உயிரை விடுகிறானோ அது போன்றதாகவே அவன மறு பிறவியை அடைகிறான் எனறு சாஸ்திரங்கள் கூறுகின்றன. இதை தத் க்ரது ந்யாயம் என்பர்.

ஜட பரதரின் வரலாறு இதனை விளக்கும். ப்ரஹ்ம த்யானத்தில் ஆழ்ந்திருந்த அந்த ரிஷி ஒருநாள் நதியில் மாத்யாஹ்நிகம் செய்யும போது அங்கு பூர்ண கர்ப்பிணியான ஒரு மான் வந்தது. அப்போது ஓர் சிங்கம் கர்ஜிக்க, அதைக் கேட்ட மான் பயத்தினால் தண்ணீரில் தாவி உயிர் நீத்தது. அதே ஸமயத்தில் அதன் கர்ப்பம் நழுவ, அதன் குட்டி தண்ணீரில் விழுந்தது. தாயற்ற அந்த மான் குட்டியைக் கண்டதும் ஜடபரதருக்கு அதன் மீது மிக்க கருணை உண்டாயிற்று. அதை எடுத்து வளர்க்கலானார். சிறிது சிறிதாக அதன் மேல் அவருக்குப் பாசம் அதிகமாயிற்று. வரவர ப்ரஹ்ம த்யானம் குறைய ஆரம்பித்தது. மான் குட்டியையே அதிகம கவனித்து வந்தார். இவ்விதமிருக்க அவருடைய கடைசி காலம் நெருங்கியது. அப்போதும் அவர் இந்த மானை யார் காப்பாற்றுவார்கள் என்று மானையே நினைத்து உயிர துறந்தார். ஆகவே அவர் மறு பிறவியில் மானாகப் பிறந்தார் என்று ஸ்ரீ விஷ்ணுபுராணம் முதலிய நூல்கள் தெரிவிக்கின்றன.

நாம் எதை நினைத்துக்கொணடு உயிரை விடுகிறோமோ அதுபோல் பிறக்கிறோம் என்பதால், நாம் பகவானை நினைத்து மரித்தால் அவனைப் போல் ஆகி அவனை அடைய முடியும் என்பது தெளிவாகிறது. எம்பெருமானைக் கடைசியில் நினைக்க வேண்டுமானால் அது திடீரெனறு வந்து விடாது. பழக்கத்தினால்தான் வர வேண்டும். இதைக் கண்ணன் கீதையில் இவ்விதம் விளக்குகிறார்: यं यं वाऽपिस्मरन् भावं त्यजत्यन्ते कलेबरम्। तं तमेवैति कौन्तेय सदा तद्भावभावितः॥ तस्मात्-सर्वेषुकालेषु मामनुस्मर॥ "அர்ஜுனா! கடைசி காலத்தில் எந்த எந்த நிலையை நினைத்துக்கொண்டு ப்ராணனை விடுகிறானோ, அந்தந்த நிலையையே மனிதன் அடைகிறான். ஏனெனில், எப்போதும் அந்த நிலையிலேயே நினைவைச் செலுத்தினவனன்றோ அவன். ஆகையால் மரணமடையும் வரையில் எல்லாக் காலத்திலும் என்னையே நினைப்பாயாக". எப்போதும்பகவானை நினைத்து வந்தால்தான் அந்த பழக்கத்தின் காரணமாகக் கடைசி காலத்திலும் அந்த நினைவே அவனுக்கு வரும் என்று தெளிவுபடுத்தியபடி.

'தத்க்ரது ந்யாயத்தின்படி நாம் பகவானைத் தாம்பால் கட்டப்பட்டவனாக நினைத்து வந்தால் நாமும் ஸம்ஸாரத்தில் கட்டுண்டாக வேண்டுமல்லவா? கண்ணன் பூதனையின பாலைக் குடித்ததாக நினைத்து வந்தால் நமக்கும் பால் குடிக்கும் பிறவி உண்டாக வேணடுமல்லவா? ஆனால் அதுதான் இல்லை. பகவானை எவ்விதமாக நினைத்து வந்தாலும் நமக்கு விடுதலையே தவிர வேறு ஜந்மபந்தம் கிடையாது. இதைக் கண்ட தத் க்ரது ந்யாயம் வெட்கமடைந்து தவம் செய்யக் காட்டில் போய் ஒளிந்து கொண்டது' என்று ஸ்வாமி தேசிகன் யாதவாப்யுதயத்தில் சமத்காரமாக அருளினார். தத் க்ரது ந்யாயம வேதத்தில் ஆரணயகம் என்ற பாகத்திலுள்ளது. ஆரணயகம் என்றால் அரணயம் அலலது காட்டைச் சேர்நதது என்று பொருள். ஆக, தத் க்ரது நயாயம ஆரணயகத்தில் அல்லது காட்டைச் சேர்ந்த பாகத்தில் இருபபதறகுக் காரணம் காட்டியபடி.

எம்பெருமானைப் பற்றிய அந்திம ஸ்ம்ருதி இருந்தால்தான் மோக்ஷம் உண்டு என்ற விதி பக்தி யோகம் செய்பவர்களுக்கே உண்டு. ப்ரபத்தி செய்பவர்களுக்கு அது அவசியமில்லை. அவர்கள் செய்த ப்ரபத்தியின் பலனாக பகவானே அவர்களுக்கு மரிக்கும் தருவாயில் தனது நினைவை

திரு. லா. ஸ்ரீநிவாஸன்
புதுதில்லி

ஏற்படுத்துகிறான். வராஹ சரம ச்லோகத்தில் இது ப்ரஸித்தம. வராஹப் பிரான் பூமி பிராட்டிக்கு அருளிய அந்த வசனம் வருமாறு: स्थिते मनसि सुस्वस्थे शरीरे सति यो नर.। धातु-साम्ये स्थिते स्मर्ता विश्वरूपं च मामजम्॥ ततस्तं म्रियमाणं तु काष्ठपाषाणसन्निभम्। अहं स्मरामि मद्भक्तं नयामि परमां गतिम्॥ இதன் பொருள்: "மனம் நல்ல நிலையில் இருக்க, சரீரமும் சாஸ்த்ரார்த்தங்களை அறிந்து மோக்ஷத்தை விரும்புவதற்கு ஏற்றவாறு தளர்ச்சியடையாதிருகக, சரீரத்தில் தாதுக்களும் ஸமமான நிலையிலிருக்க, எந்த மனிதன் உலகத்தைச் சரீரமாக உடையவனும், கர்மத்தால் வரும் பிறவி இல்லாதவனுமான என்னைச் சரணமடைந்து நினைக்கிறானோ, அவன் இறக்கும்போது, கட்டையும் கல்லையும் போல் செயலற்றுக் கிடக்கின்ற என் பக்தனை அவனைப் பற்றி நானும் நித்யாநுபவம் கொடுக்க நினைக்கிறேன்; அவன் மோக்ஷத்தை யடையும்படி செய்வேன்". இதை ஸ்வாமிதேசிகன் அபீதிஸ்தவத்தில் स्थिते मनसि विग्रहे என்ற ச்லோகத்தில் வராஹசரம ச்லோகத்திலுள்ள பதங்

# பரிமள ரங்கன்

**ம**துகைடபாகள் என்ற அசுரர்கள வேதங்களைப் பறித்துச் சென்றதனால் மகாவிஷ்ணு மச்சாவதாரம் எடுத்து மதுகைடபர்களை மாய்த்து மறைகளை மீட்டார். அசுர சம்பந்தத்தால் வேதங்களுக்கு விளைநத தூகநதத்தையும் துராசாரத்தையும் தொலைக்க முகுந்தன் முனைந்தார். அதனால்அவை தூய்மையும்தூமணத்தையும்அடைந்தன (வேதங்களுக்கு) பரிமளம் (நறுமணம்) வழங்கியதால் இங்கு இறைவன் 'பரிமளரங்கன' எனப் போற்றப்படுகிறான். அவன் பள்ளி கொண்ட கோயில் விமானம 'வேதாமோத விமானம்' என வழங்கப்படுகிறது. கங்கையைக் காட்டிலும் புகழ் ஓங்கித் திகழ இஙகு அன்னை காவிரி கடுந்தவம் கொண்டாள். "உனது கரை மருங்குகளில் நான் கோயில் கொண்டு விளங்குகிறேன்.உன் தவம் பலிக்கும்." என இறைவன் அருள் புரிந்தான்.அவன் அவ்வண்ணம் பள்ளி கொண்ட திருவரங்கப் பட்டினம், திருவரங்கம், அப்பால ரங்கம (கோயிலடி) திருகுடந்தை மத்திய ரங்கம், திரு இநதளூர் பரிமளரங்கம் என்ற ஐந்து தலங்கள்' 'பஞ்சரங்கத் தலங்கள்' ஆயின. நூற்றெட்டுத் திருப்பதிகளுள் சிறந்து விளங்குவதும் திரு இந்தளூர் திவவிய தலம். துலாத் திங்களில் நடைபெறும் திருவிழா இங்கு காண வேணடிய பெருவிழாவாகும்.

**திரு. ஆர். சுப்பராவ் — திருக்கோவலூர்.**

களையே பெரும்பாலும் உபயோகித்து நமகக்கு அறிவிததுள்ளார். அதன் கருத்தாவது: "ரங்கநாதனே! இவ்வுலகில் எவன் மனம் நல்ல நிலையிலுள்ளபோது, சரீரம் நற்குணஙகளுடனிருக்கையில், தாதுக்களின் உரிய நிலை இருக்கும்போது, எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாய், பிறப்பற்றவனான உன்னை ஒரு முறை நினைத்து ப்ரபததி செயகிறானோ, ஆயுள் முடிவில் மரணத்தில் அகப்பட்ட அவனை அநத நினைவாலேயே தானே நலல நினைவை உண்டாக்கி முகதிக்கு உரிய இடத்தை அடையச் செய்கிறாயன்றோ?" மேலும், வராஹ சரமச்லோகத்திற்கு வ்யாக்யாநமாக ஸ்ரீரஹஸ்ய சிகாமணி என்ற ரஹஸ்ய க்ரந்தத்தையும் ஸ்வாமி தேசிகன் அருளியுள்ளாா.

திருக்கச்சிநம்பி மூலம் வரதராஜன் பாஷ்யகாரருக்கு அருளிய ஆறு வார்த்தைகளுள் अन्तिमस्मृतिवर्जनं "ப்ரபந்நனுக்கு அந்திம ஸம்ருதி அவச்யமில்லை" என்பதும் ஒன்று.

இப்படி சாஸ்திர நிலைமை இருந்த போதிலும், ப்ரபந்நாக்ரேஸரர்களான ஆழ்வாா ஆசார்யர்கள் தங்களுக்கு அந்திம ஸ்ம்ருதி வேணடுமென்று பகவானைப் பிரார்த்திப்பதை நாம் காண்கிறோம். இதற்குக் காரணம் அந்திம ஸ்ம்ருதியினால் தான் மோக்ஷமுண்டு எனபதல்ல. பகவானின் நினைவு அவர்களுக்கு மிகவும் போக்யமானதால், தங்களுககு அது கடைசியிலும் விடாமலிருக்க வேண்டும் என்பது அவர்களின் பேர்வா எனபதே. கூரத்தாழ்வான் பரமபதிக்கும்போது எம்பெருமானாா அவர் திருச்செவியில் திவய மந்த்ரத்தை ஓத, அருகிலிருந்த மற்ற சிஷ்யர்கள் யாவரும் இவ்விதம் செய்தால்தான் மோக்ஷம் போலும், நமக்கெல்லாம் இந்த பாக்யம் எப்படி கிடைக்கும் என்று வ்யாகுலப்பட, பாஷ்யகாரரும் அது ஆழ்வானுக்கு மிக விருப்பமானது என்றதால் செய்ததே ஒழிய, அவ்விதம் செய்தால் தான் ப்ரபந்நனுக்கு மோக்ஷம் என்பதில்லை என்று அவர்களைத் தெளிவித்தார். அதுபோல பகவானைப் பற்றிய அந்திமஸம்ருதி ஆழ்வார் ஆசார்யர்களுக்கு மிகவும் விரும்பத்தக்கது என்பதேயனறி அது அவச்யமல்ல என்பதை உணரலாம். கூரத்தாழ்வானைப பற்றிய இந்த விவரத்தை ஸவாமிதேசிகன ஸ்ரீமத ரஹஸய த்ரய ஸாரததில் நிர்யாணாதிகாரத்தில் இவ்விதம் அருளியுள்ளாா: "ஆழ்வான ப்ரக்ருதி அறியீரகளோ? இவ்வவஸ்தையில் இவருக்கு இது கர்ப்பூரத்தையும் கணட சர்க்கரையையும இட்ட மாத்திரமன்றோ? நாமிது உபாயத்துக்குப் பரிகாரமாகச செய்தோமல்லோம்" என்று (பாஷ்யகாரர்) அருளிச் செய்ய முதலிகள் தெளிந்து நிர்பரரானார்கள்".

"துப்புடையாரை" எனனும பதிகத்தில் பெரியாழ்வார் "எய்ப்பென்னை வந்து நலியும் போது அப்போது நானுன்னை நினைக்கமாட்டேன், அப்போதைக்கிப்போதே சொல்லி வைத்தேன் அரங்கத்தரவணைப்பள்ளியானே" என்றும், 'சொல்லலாம் போதே தன் நாமமெல்லாம் சொல்லி வைத்தேன்" என்றும், "எண்ணலாம்போதே உன் நாமமெல்லாம் எண்ணினேன்" என்றும் 'கடைசி காலத்தில் உன்னை நினைக்க முடியாமற் போகுமாதலால், முடிந்த போது முன்னதாகவே உன்னை நினைத்து உன் நாமங்களைச் சொல்லி வைககிறேன' என்று எம்பெருமானிடம் தெரிவிததுக் கொள்கிறார்.

கூரத்தாழ்வான அதிமாநுஷஸ்தவத்தில், गोपालवेषपरिकर्म என்ற ச்லோகத்தில் வருமாறு அருள்வதையும் காணலாம். "உபய விபூதி நிர்வானகனாயும் அதனாலேயே உத்க்ருஷ்டனாவுமிருக்கிற யாதொரு தேஜஸ்ஸானது ப்ரக்ருதி மண்டலத்துக்கப்பால் இருக்கின்றதோ, அந்த தேஜஸ்

ஸானது மயில்தோகை மாலையை அணிநது கொண்டும, கோபால வேஷத்தை அலங்காரமாக உடைய தாயும், பசுக்களின தூளியாலே புழுதிபடிநத திருக்குழலையுடைய தாய்க்கொண்டும் என் நெஞ்சினுள்ளே இருக்க வேண்டும்'' கணணன் என்னுடைய உள்ளத்தில் என்றும், கடைசி க்ஷணத்திலும் எழுநதருளியிருக்க வேணடும் என்று ப்ரார்த்தித்தாராயிறறு.

இதை ஒரு விதத்தில் அடியொற்றியே ஸ்வாமிதேசிகன் अघराहितचारुवंशनाला: எனற கோபால விம்சதி ச்லோகத்தை அருளியுள்ளார். அதன் கருத்தாவது : ''திருவதரத்தில் வைக்கப் பெற்ற அழகிய புல்லாங்குழலையுடையனவாய், திருமுடியில் சரிநது நிற்கின்ற மயில் பீலி மாலைகளையுடையனவாய், இந்திர நீலமணிததுணடம் போல நீலநிறமான உருவெளித் தோற்றங்கள் என் மரண காலத்தில் உண்டாக வேணடும்''. ஒருருவத்தோடு த்ருப்தி பெறுமல் கண்ணனின் பல உருவங்கள் தன் முன் அந்திம தசையில் தோன்ற வேண்டும் என்று ஆசைப் படுகிறுர் ஆசிரியர். இந்த ச்லோகம் ஸங்கலப ஸூர்யோதயத்திலும் காணப்படுகிறது.

வரதராஜ பஞ்சாசத்தில் यावत्र पश्यति என்ற ச்லோகத்தில் ஸ்வாமி தேசிகன் இந்த ப்ரார்த்தனையையே வேறு விதமாக அமைக்கிறுர். அதாவது, ''கலயாண குணங்களையுடைய வரதனே! மிகவும் கோபமுடையவனும், புருவங்களை நெறிபபதால் பயங்கரமான கொடிய முகத்தையுடையவனுமான யமன் என்னை நோக்குவதற்குள், மலர்ந்த தாமரை மொட்டுப்போல். குளிர்ந்த கருணை நினைந்த உன் கடாக்ஷங்கள் என் மீது விழ வேணடும்.'' என்று. இதே போல் தெய்வநாயகன் விஷயத்தில் நவமணி மாலையில் ஸ்வாமிதேசிகன் ''வெஞ்சொலாளர் கால் தூதர் வீசு பாசம் வந்தென்மேல், விழுநதழுந்தியான் அயர்ந்து வீழ்வதற்கு முன்னம் நீ 'அஞ்சலஞ்சலஞ்சல்' என்றளிகக வேண்டும்'' என்றும், ''இருளும் மருளும தருமநநாள் எழிலாராழி சங்கேநதி, அருளும் தெருளும் தரவென் பால அடியோர் மெய்ய வந்தருளே'' என்றும், ''காலனுர் தமரென்னைக கவராது, ஐயனே வந்தன்றஞ்சலெனறருள்செய்'' என்றும் அருளியிருப்பதும் இங்கு அநுஸந்தேயம்.

எலலாவற்றிற்கும் மேலாக பாது காஸஹஸரத்தில் ஸ்வாமி தேசிகன இருபததைநதுககும மேலான ச்லோகங்களில் தமது அந்திமதசையைப் பற்றிக்குறிப்பிட்டு அப்போது தமககு ஸ்ரீரங்கநாதனின பாதுகை ப்ரத்யக்ஷமாகித் தம்மைக காபபாற்ற வேணடும் எனறு ப்ரார்த்திக்கிறுா. அநத சலோகங்களின் எணணிககைகளா வன. 310, 369, 371, 391, 396, 409, 414, 436, 439, 466, 467, 468, 469, 470, 474, 477, 482, 514, 520, 562, 652, 901, 909, 916, 969, 970, 992, 993. இவற்றில் 466 முதல் 470 வரை சேர்ந்தாப்போல் ஐநது சலோகங்களும், மறறும் சில இடஙகளில் இவை அடுத்தடுத்து வருவதையும காணலாம். இவவிதம் அருளும்படி ஸ்வாமியின திருவுள்ளத்தில் அப்போது எனன ஓடிக கொணடிருந்தது எனபது தெரியவில்லை. இது ஆராய்ச்சிக்குரியது.

இங்குக் குறித்த ச்லோகங்களில் 414ம் 436ம் யாவருக்கும் பொதுவானவை. முதல் ச்லோகததின் பொருள் : ''தேவி, மணிபாதுகையே, பாகயவானகள் அநதிம காலத்தில் ஸம்ஸாரவாதைப் பொருமல் எம்பெருமானை வேண்டும் தங்களுடைய கூச்சலுக்குத்தக்க மறுமொழியைத் தங்கள் காதுகளில் உன் இனிய ஒலி மூலம் நீ செய்வாய் என்ற நமபிக்கையுடன் காவிரியின் பரிசுத்தமான மணல்திட்டுக் கரையோரங்களில் நித்யமாக வஸிப்பதைப் பெறுகினறனா.'' இரணடாவது ச்லோகத்தின கருத்தாவது : ''மணிபாதுகையே, ஸ்ரீரங்கத்தில் எல்லை ஓரத்தில் படுத்திருககும் ஜனங்கள் மரண காலத்தில் அச்சத்தினுல் குறிப்பொன்றுமினறிக் கதறும் போது நீ தாய் போல தவருத தயையையுடையவளாய் இனிய சொற்களுடன் விரைவாக நெருங்குகிறுய்.'' பொதுவாக திவ்ய தேச வாஸம் செய்பவர்களை பகவான் காப்பாற்றுகிறுர் என்பதை இங்கு விசேஷிதது பாதுகையின விஷயமாக ஸ்வாமி ஸாதித்துள்ளார். இந்த ச்லோகங்கள் தயாசதகம் (48) देवात्प्राप्ते என்ற ச்லோகத்தை ஒரு படி ஒக்கும். அதன் பொருள் வருமாறு : ''தயாதேவியே! உன்னுல ஏற்பட்ட பாக்யத்தால் திருமலைப் பககத்தை அடைந்த சேதநன 'ஸ்வாமி, காத்தருள' எனறு தன வசமினறி வந்த சொல்லையுடையவனுய மரணத்தையடையும்போது, பிராட்டியுடன கூடிய எம்பெருமான் உன்னுடைய கடாக்ஷத்தை விரும்புமவனுய, வேதக் கூட்டங்களுக்குத் தொடக்கமான (ஓம் = 'அவ்வாறே செய்கிறேன்' என்கிற) விடையால் எதிரில் நிற்கும் நிலையைத் தருகிறுன்.''

ச்லோகம் 520 ப்ரஹ்மஸூத்ரத்தை (4-2-16) அடியொற்றியது. அதிலுள்ள பதங்களையே ஸ்வாமி தேசிகன் உபயோகித்துள்ளது கவனிககததககது. அதன பொருள் : ''கேசவனின் பாதுகையே! உன்னை வணங்கின ஜந்மஸாபல்யமுடைய மஹானின முடிவு காலததில் அவனுடைய ஹ்ருதயமானது உனது ஒளிகளால் ப்ரகாசமுளளதாகிறது. அதன் காரணமாக அவன் நடு நாடியான ஸுஷும்னையின் வாயிலாகப் புறப் படுகிறவனுய் முக்தியையடைகிறுன்.'' பகவான் ஹ்ருதயததை ப்ரகாசப் படுத்துகிறுன் என்று ப்ரஹ்மஸூத்ரத்தில் கூறியதை இங்கு ஸ்வாமி தேசிகன் எமபெருமானின் பாதுகை

# தி. தி. தேவஸ்தான சமய நூல் வெளியீடுகள்

## தமிழ்

| | | ரூ. காசு. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன) | 0—50 |
| 2. | ஏழுமலே யாத்திரை — திரு. டி. கே. நாராயணன | 0—75 |
| 3 | அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொ்ன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. | பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன | 0—50 |
| 5. | இந்து சமயக் கையேடு (தமிழாககம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. | நிதயாநுஸந்தானம் (வடகலே) | 4—00 |
| | நித்யாநுஸந்தானம் (தென்கலே) | 4—50 |
| 8. | சித்திரத்திருப்பாவை — பி. ஸ்ரீ. | 8—25 |
| 9. | கண்ணன் பேசுகிருன —நஜன் | 0—50 |
| 10 | சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |

## சம்ஸ்கிருதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேஸவரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. | அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. | கடோபநிஷத் —டாக்டர். கே. சி வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. | க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. | மார்க்கண்டேய ஸமஹிதா | 18—00 |
| 6. | ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. | சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. | தத்வ சாங்க்யானம் —திரு. ஆா. ராமமூர்த்தி சாமா | 2—00 |
| 10. | பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 . திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஒ. மூலமாக அனுப்பி பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூல மாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "உதவி செய லாட்சித் தலைவர்(எஸ்), நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரிக்கு ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

தனது ஒளியால் அவ்விதம் செய் கிறது என்று பரிஷ்காரம் செய்துள் ளார்.

மறறபடி 369ம் ச்லோகத்தில் "மணி பாத ரகைஷயே, எனது மரண தசையில் நாக்கொட்டி நான் தவிக் குமபோது நாகணையானே ஸ்ரீரங்க விமானத்தினின்றுத் தாமதமின்றி எழுந்தருளப் பண்ணிக் கொண்டு உனது பச்சைக் கற்பூரப்பொடியின் பரப்பு போன்ற தூட்களால என்னு டைய தாபத்ரய வாதையை நனருக நீக்க வேணடும்" என்று வேண்டிக் கொளகிருர். இது 'கற்பூரத்தையும கணடசர்க்கரையையும் இட்டாற போலே" என்று பாஷ்யகாரா கூரத தாழ்வான் விஷயமாக அருளியதாக முன்கூறியதை அடியொற்றியுள்ளது.

சலோகம் 969 மிகவும் முக்கிய மானது. கவிதார்க்கிக ஸிம்ஹம், வேதாந்தாசார்யர் முதலிய அநேக பிருதங்களைப் பெற்றிருந்தும் ஸ்வாமி தேசிகன் தமது கடைசி காலத்தில் தன்னே அரங்கனின் அந்தரங்கள் "பாதுகாஸேவகன" என்று அழைக்க வேண்டுமெனறு இதில் விழைகிருர்.

மற்ற ச்லோகங்களில யமபடர் களின் மிரட்டுதலைத் தான் கேட்காத படி பாதுகை அவர்களை ஓட்ட வேண்டுமென்றும், ஸ்ரீ, பூதேவிகளு டன அரங்கனைஎழுந்தருளப் பண்ணிக் கொண்டு வர வேணமென்றும், தனது இனிய ஓசைகளால் தன்னை ஸந் தோஷிக்க வேண்டுமென்றும் பலவித மாக வேண்டிக் கொள்கிருர்.

ப்ரபந்நர்களுக்கு யம பயமோ நர கமோ கிடையாது என்று சாஸ்திரங் கள் கூறியிருப்பதாலும், அந்திம ஸ்ம்ருதியும் அவர்களுககு அவசிய மில்லை என்பதும் தெளிவாக இருப்ப் தாலும், ஆழ்வார் ஆசார்யர்கள் மேற்கூறியபடி அருளியுள்ளவையெல் லாம் நம் போன்ருருடைய நன்மைக் கும் அநுஸந்தானத்துக்குமே என்று நாம் தெளிய ப்ராப்தம். ★

# சரம ஸ்லோகத்தின் பொருள் சுருக்கம்



அடுத்துள்ள பதங்கள் "மாம் ஏகம்" என்பது. இதற்கு என்னை ஒருவனையே என்பது பொதுவான பொருள். மாம் என்பது இங்கு ஸ்ரீ கிருஷ்ணன், தான பரமாத்மா என்றும், அவதாரமாக வந்திருப்பதையும், துஷ்டநிக்ரஹ சிஷ்ட பரிபாலனத்தையும், தான் சத்யம் என்பதையும், தானே ப்ராப்ய மும், ப்ராபகமுமாக இருப்பவன் என்பதைத் தெரிவிக்கிறது. பகவான் அவதாரம் ஆகும் போதே, சங்கு, சக்ர, பீதாம்பரதாரியாய் அவ தரித்து, அதிபாலகனாய் இருந்த போதே, அதிமானுஷ்யமான கார்யங் களைச் செய்தான் என்பதும் குறிப் பிடத்தக்கது. தவிர மாம் என்ற சொல், எம்பெருமான், இந்தசேத னன், என்றைக்காவது நம்மை வந்து அடைவதற்கு விரும்பி ஓர் உபா யத்தைச் செய்ய மாட்டானா என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறான் என்பதையும குறிககும எனகிறார்கள் ஸம்ப்ரதாயமறிநத வைணவ அறிஞர் கள்.

தவிர மாம் என்ற சொல் பகவான் தன்னுடைய திவ்யமங்கள விக்ரஹ திருமேனியையும், விஸ்வ ரூபத்தை யும் காட்டுகிறான். இதனால் பகவானு டைய முக்கிய நான்கு குணங்களான, 'வாத்ஸல்யத்வம்', 'ஸ்வாமித்வம்', 'சௌசில்யம்,''சௌலப்யாதி' குணங் களையும் வெளிப்படுத்துகிறான் என்று பொருளாகும் இதே போல், 'ஏகம்' என்ற சொல்லும் என்னை ஒரு வனையே என்பதுடன் சேர்த்து அருளியுள்ளான். தவிர "ஏகம்" ஒருவனையே என்பது தானே உபாய மாகவும், உபேயமாகவும் இருந்து பத்தி செய்கிறவனுக்கு, மோக்ஷத்தை பலமாக கொடுப்பவன் என்ற கருத் தில் எடுத்துக் கொள்ள வேண்டும் என்கிறார் முமுக்ஷுப்படி ஆசிரியர். இவரும் சரம ஸ்லோக ப்ரகரண 28ம் சூத்திரத்தில், 'இத்தால் பர வ்யூகங்களையும், தேவதாந்தர்யாமித் வத்தையும் தவிர்க்கிறது என்றும், 29ம் சூத்திரத்தில் 'தர்ம ஸ்தாபனம் பண்ணப் பிறநதவன், தானே ஸர்வ தர்மங்களையும் விட்டு, என்னைப் பற்று எனகையாலே, ஸாக்ஷாத் தர்மம தானே என்கிறது' என்று காட்டியுள்ளார்.

தவிர 'மாம்' என்கிற பதத்திலேயே எக்காலத்திலும் பிரியாத, பிராட்டி யின் சேர்த்தியும கூடமாக (மறைந்து) இருக்கிறது எனகிறார்கள் நம் பூர்வா சார்யர்கள்.

அடுதது வரும் பதம், 'சரணம்', என் பது. இப்பதததிற்கு அடைக்கலம், தஞ்சம் என்று பொருள். சரணம் என்பது உபாயம் என்கிற பொருளை கொள்ள வேணும் என்கிறார்கள் நம் ஆசார்ய பெருமக்கள் இது பகவான் அர்ஜுனனைப் பார்த்துக் கூறியிருந் தாலும், இவ்வுபதேசம் நமக்குச் செய்த உபதேசமாக எடுத்துக் கொள்ளவேணும். தவிர என்னையன்றி

---

திரு. டி. கேசவ அய்யங்கார்-அல்லூர்.

---

வேறு யாரையும் சரணமடையாதே என்பதே இதன் உட்கருத்தாகும். முமுக்ஷுப்படி ஆசிரியர், சரமஸ்லோக ப்ரகரணம் சூத்திரம் 52ல், 'சரணம்' உபாயமாக என்றும் 52ம் சூத்திரத் தில், இந்த சரணஸப்தம், ரக்ஷிதாவை யும், க்ருஹத்தையும், உபாயத்தை யும், காட்டக் கடவதேயாகிலும் இவ் விடத்தில் உபாயத்தையே காட்டு கிறது' என்று அருளிச்செய்துள்ளார்.



3

இந்த சரணத்தை (உபாயத்தை) காட்டுவதற்காகவே, எம்பெருமாள் திருமலையில் அபயஹஸ்தமாக காட்டாமல், வலது ஹஸ்தத்தைத் தன் திருவடியைக் காட்டியவாறு (சரணமடை) என்பது போல சேவை சாதிக்கிறான். இக்குறிப்பை நம்மாழ்வார், திருவாய்மொழி 6ம் பத்து, 10ம் திருவாய் மொழி, 11வது பாசுரத்தில,

"அடிக்கீழமர்ந்து புகுந்து அடியீர்!
வாழ்மினென்றருள் கொடுக்கும
படிக்கேழில்லா 'பெருமானை'"

என்று பாடியுள்ளார். 'கல்லில் (திருமலையில்) யாராலும் இல்லை செய்ய முடியாமல் பேராது நின்று தான் உபாயமாய் இருக்கும் தன்மையை கல்வெட்டாகும்படி, அருளிச் செய்கின்றமையைக் கூறியிருப்பதனால், இன்னார், இணையாரென்ற வாசி பாராமல், எல்லாரும் சரணமாகப் பற்றப்படும் தன்மையுடையவன்', என்று ஆசாரியஹ்ருதயத்தில் அழகிய மணவாளப் பெருமாள் நாயினார் அருளிச் செய்துள்ளார்.

அடுத்துள்ள பதம வ்ரஜ என்பது. இந்த 'வ்ரஜ' என்ற பதமானது, த்வயத்தில் கூறப்பட்ட, 'ப்ரபத்யே' என்ற பதத்திற்குப் பதிலாக இங்கு வ்ரஜ என்று கூறப்பட்டுள்ளது. த்வயத்தில், சேதனன் பகவானை சரணமடைகிறேன் என்று கூறியதற்குப் பதிலாக, சரம ஸ்லோகத்தில் பகவான் சேதனர்களை என்னை சரணமடை என்று உபதேச பூர்வமான கட்டளை இடுவதாக அமைந்துள்ளது. 'ஸர்வதர்மான் பரித்யஜ்யமாமேகம் சரணம வ்ரஜ' என்று சரம ஸ்லோகத்தின் முதல் பாதியில் பகவான் ப்ரபத்தி என்கிற உபாயத்தைக் கட்டளையாக இட்டு, பின் பாதியினால் த்வயத்தில் கூறப்பட்டது போல், ப்ரபத்தியாகிற சரணாகதியை ஏற்பவனாகவும் அதற்குப் பலனைக் கொடுப்பதாகிற செய்கையை அருளிச் செய்கிறான்.

இனி சரமஸ்லோகத்தின், பின்பாதியின் பொருள் சுருக்கம் காண்போம். இதில் பின்பாதியில் உள்ள முதல் பதம், 'அஹம' என்பது :

இது நான் என்ற பொருளை, முன் பாதியில் 'மாம் ஏகம்' என்று இரண்டாவது வேற்றுமையுருவில் சொன்னதை, இங்கு முதல் வேற்றுமையுருபில் சொல்லுகிறது. இந்த நான் என்னும் பதம், பகவான் தான் ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனாய், ஸமஸ்த குணங்களோடு கூடியவன் என்பதைத் தான், 'அஹம்' என்ற பதத்தால் தெரிவிக்கிறான். முமுக்ஷுப்படி சரம ஸ்லோக ப்ரகரணத்தில் சூத்திரம் 58ல், 'ஸர்வஜ்ஞனாய், ஸர்வ ஸக்தியாய், ப்ராப்தனான நான்' என்று கூறியுள்ளார்.

---

இரண்டாவது ஆக உள்ள பதம், 'த்வா' என்பது உன்னை என்பது பொருள். இங்கும் பகவான் அர்ஜுனனை வ்யாஜ மாகக் கொண்டு கூறுவதாவது: "தான் முன்பு பல இடங்களில் த்வம், ஹிதம், புருஷார்த்தம் மற்றும் யோக மார்க கங்கள் போன்ற பல வழிகளை உப தேசித்து, செலவம், ஐஸ்வர்யங்கள் யாவும் நிலையற்றவை, என்னை அடை வதுதான் பேரின்பமாகும். இதற்கு நான் முன் கூறிய கர்ம, ஞான, பக்தி யோகங்கள் கஷ்டமாக இருப்பதினால் அதில் விருப்பமற்றவனாக காண்கிறாய். ஆகையால் நீ என்னைச் சரணமாகப் பற்றி, உன்னையே என்னிடம் தஞ்ச மாக அடை, உனக்கு ஏற்படும் எல்லா விரோதிகளையும் ஒழிககக கூடிய ஸர்வஸக்தனான என்னை மற்ற உபா யங்களைத் தவிர்த்து என்னிடத்தில் பொறுப்பை விட்டுவிடு'. இவ்வித நிலையில் உள்ள சேதனனாகிய நம்மை, 'உன்னை' என்ற பதம் காட்டுகிறது என்பது உட்பொருளாகும்.

அடுத்த பதம், 'ஸர்வ பாபேப்யோ' என்பதாகும். எல்லா பாபங்களி லிருந்து எனறு பொருள்படும்.

" அஹமஸ்மி ய அபராததநாம
ஆலயோ கிஞ்சநோ கதி: |
த்வமேவோபாய பூதோ மே
பவேதி ப்ரார்ததநா மதி ||

என்பது பகவத் சாஸ்திரம். இதன் பொருள்: அடியேன் அபராதங்கட் கெல்லாம் இருப்பிடம். அகிஞ்சனன், அகதி. தேவரீரே எனக்கு உபாய பூதராக இருக்க வேணடுமென்பதே என் பிரார்த்தனை.

பொதுவாக உலகத்தில் பாபம செய்யாதவர்களே இல்லை. ஸ்ரீ வைஷ்ணவஸித்தாந்தத்தின்கொள்கைபபடி ஸதாசார்ய ஸம்பந்தமே உத்தாரகம் என்றும், ஸதாசார்யனையடைந்தால், மோக்ஷத்திற்கு தடையாக இருக்கும் கொடிய பாபங்களையும் போக்க, வழி காட்டுவார். சதாசார்யனை அடை யாமல் இருந்தால், புண்ணியங்கள் கூட மோக்ஷத்திற்கு பயன்படாது. இககருத்தை பெரிய ஜீயா எனகிற ஸ்ரீ மணவாள மாமுனிகள் தான் அருளிச செய்த 'உபதேச ரத்தின மாலை' எனகிற ப்ரபநதத்தில் 61ம் பாசுரத்தில்:

" ஞானம அனுட்டானம் இவை
நனறாகவேயுடைய
னான குருவை அடைந்தக்கால -
மாநிலததீர்
தேனார் கமலத்திருமகள் கொழுநன்
தானே வைகுந்தம் தரும்"

என்று அருளிச செய்திருப்பதைக் காணலாம். பாபங்களில் ப்ராரப்தம், ஸஞ்சிதம் என இருவகைபபடும். பலனைக் கொடுத்துக் கொண்டிருப் பதை 'ப்ராரப்தம்' என்றும், பிறகு ஒரு சமயத்தில் பாபத்தின் பலனைக் கொடுக்கக் காத்துக் கொண்டிருப் பதை 'ஸஞ்சிதம்' எனறும பெயர். ஸாவபாபேப்யோ என்னும் பதத் தால், பகவானை அடைவதற்கு தடை களாக இருக்கும் அஹங்கார, மமகா ரங்களாகிய ஸவரூப விரோதியும், ஸ்வரக்ஷணத்தில் ப்ரயத்தனம் என் கிற உபாய விரோதியையும், பகவத் கைங்கர்யங்களில் ஸ்வராபத்தை அபேக்ஷிப்பதாகிய புருஷார்த்த விரோதியையும குறிக்கப்படுகின்றன எனபர். தவிர அவித்யை அல்லது அஞ்ஞானம், விபரீதஞானம், அன்யதா ஞானம், தேஹாத்மாபிமானம், விபரீத ஞானம் முதலியவைகளும் இதில் அடங்கும் என்பது நம்பூர்வா சார்யாகளின் கருத்தாகும். மோக்ஷத்தை விரும்புகிறவர்களுக் கும் புணய பாபங்கள் உண்டு முமு க்ஷுவுககு ஸ்வர்க்கம முதலானதுகள் வேணடாதாகையால், அதற்காக செய்த சில புண்ணிய செய்கைகளும், தெரிந்தும், தெரியாமலும செய்த பாபங்களும் போக வேண்டும். சரணா கதி செய்கிறவனுக்கு ப்ராரப்தமான பாபங்கள் தவிர, ப்ரபத்திக்கு முன் செய்த பாபங்களைப் பகவான் போக்கி விடுகிறான். ப்ரபத்திக்குப் பின் செய்த பாபங்கள், தான் செய்யும் ப்ராயச் சித்தத்தால் கழிந்து விடுகிறது. மறு படியும இதேபோல் செய்தால், பக வான சிறு தணடனை கொடுத்து அதன் மூலம் கழிததுவிடுகிறான். எல் லாம் கழிந்த பிறகு மோக்ஷத்தையும் கொடுக்கிறான் எம்பெருமான.

சரம ஸ்லோகத்தில கடைசியாக உள்ள பதம, 'மா சுச!' எனபது. 'மா சுச:' என்றால் துக்கமடையாதே என்று பொருள், தவிர இங்கும பகவான அர்ஜுனனை வ்யாஜமாக வைத்து சேதனர்கள் உபாயமாகவும, உபேய மாகவும் இருக்கிற என்னைச சரண மடைவதால், சேதனர்களுடைய சோகங்களும், சோகத்திறகுக் காரண மாக இருந்த தடைகளெல்லாம் கழிந்து விடுவதால், சோகத்திறகு இனி இடங்கிடையாது என்று கூறி, மஹாவிஸ்வாசததால் உறுதிப படுத்துப்படுகிறது எனபது பகவான் வாக்காகும.

சேதனர்கள் பலனை அடைவதறகு, கஷ்டமான உபாயங்கள எதுவும் இல்லாமல், ஸ்வரூப விரோதி, உபாய விரோதி புருஷார்த்த விரோதி ஆகிய எல்லா விரோதிகளையும் போக்கக் கூடியதாகவும், தாமதமின்றிப் பலனை கொடுக்கக் கூடியதுமான இநத ப்ர பத்தியோகம் என்னால் உபதேசம் என்று பெற்ற பிறகு, சேதனாகள் சோகப்படுவதற்கு எக்காரணமும் இல்லை என்பதாகும. ப்ரபத்தியை அனுஷ்டிப்பதால் பலனைக்கொடுப்பது பகவானின் பொறுப்பாகிவிடுகிறது. அந்தப் பலனை பெறுபவனும் யானே ஆகிறேன். ப்ரபத்தி செய்தவனை ரக்ஷிககாமல் இருபபது பகவான் குற்றமாகிவிடும. எனவே நீ (சேத னர்கள்) துக்கமடைய வேண்டிய தில்லை என்பது பகவான் திருவுள்ளம்.

முடிவுரையும சரம ஸ்லோகத்தின சாரமான பொருளும் :

இந்த சரம ஸ்லோகமானது, ஸத்ய ஸங்கல்பனான எம்பெருமானுடைய சத்ய வாக்காகும். இதன் முன் பகுதி யிலே சேதனர்களின் கடமை, அதை முடிக்கும் விதம் முதலியவைகளைக்

கூறினான். பின் பகுதியான சேதனர்களுக்கு, எம்பெருமானை அடைவதிலுள்ள பயம், மயக்கம் தேவையற்றது என்றும், அவைகளைக் கழிப்பதற்குரிய வழியையும் கூறுகிறான். சேதனர்களாகிய நாம் அல்ப ஞானமும், அல்ப அறிவும், அல்ப சக்தியையும் உடையவர்களாகவும், நம் குறுகிய வாழ்நாட்களுக்குள் மோக்ஷமாகிய மேல் வீட்டை விரும்புகிறவர்களாகவும் இருக்கிறோம். வேத வேதாங்கங்களில் கூறிய கர்மயோகம் ஞானயோகம், பக்தியோகம் முதலியவைகளை நன்றாக அறிந்து அனுஷ்டிக்க முடியாதவர்களாகவும் இருக்கிறோம். தவிர இவைகள் காலம் கடந்து முடிவில்தான் பலனைத் தருபவைகளாகவும் இருக்கின்றன. பகவான் தன்னைச் சகல ஜீவர்களும், தன்னையடைய தான் மிகுந்த எளியவன், சுலபமாக அடையக் கூடியவன் என்பதைத் தெளிவாகக் கூறியுள்ளான்.

'பத்துடை யடிவர்க்கெளியவன், பிறர்களுக்கரிய வித்தகன்' என்று நம்மாழ்வார் திருவாய்மொழி 1ம் பத்தும், 3ம் திருவாய்மொழி முதல் பாசுரத்தில் அருளிச் செய்துள்ளான். தவிர தன்னையடைய தானே உபாயமாகவும், உபேயமாகவும் இருப்பதால், தன்னை, மற்ற உபாயங்களை விட்டு, ப்ரபத்தி உபாயத்தால் அடைந்தவர்களை ரக்ஷிக்க கடமைப் பட்டவன் என்றும் கூறியிருக்கிறான். தவிர தான் சகல லோகங்களுக்கும் சரண்யனாக இருப்பதோடு, ரக்ஷிக்க வேண்டிய சக்தியையும், குணங்களையும் உடையவனாக இருப்பதால், தன்னை முழு நம்பிக்கையோடு சிறிது கூட சந்கேமில்லாமல் சரணமடைந்தால், தடைகளாக இருக்கும் விரோதிகளை ஒழித்து, பாபங்களைத் தொடராமல் இருக்க நமக்கு மோக்ஷத்தை அளிக்கிறான், அதில் சந்தேகமில்லை என்பதே சரம ஸ்லோகத்தின் சாரமான பொருளாகும்.



### தி. தி. தேவஸ்தானத்தாரின்

## ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை | —சுப்ரபாதம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்) |
| 6-00 | ,, | 6-30 | ,, | —சுத்தி—முதல்மணி |
| 6-30 | ,, | 11-30 | மதியம் | —ஸர்வதரிசனம் |
| 11-30 | ,, | 12-30 | ,, | —சுத்தி, 2-வது மணி |
| 12-00 | ,, | 6-00 | மாலை | —ஸர்வதரிசனம் |
| 6-00 | ,, | 6-30 | ,, | —சுத்தி, 3-வது மணி |
| 6-30 | ,, | 9-15 | இரவு | —ஸர்வதரிசனம் |
| 9-15 | ,, | 9-30 | ,, | —சுத்தி, ஏகாந்தசேவை |

### வெள்ளிக்கிழமைகளில்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 9-00 | ,, | 10-00 | ,, | —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்) |
| 9-00 | ,, | 10-00 | ,, | —அபிஷேக தரிசனம் (ரூ. 2/- நபர் ஒருவருக்கு) |

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 2/- (நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | | ஆர்ஜித சேவைகள் | |
|---|---|---|---|---|
| (அ) பொங்கல் | ,, | ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 100/- | (ஆ) யானை வாகனம் | ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் | ,, | ரூ. 75/- | (இ) தோலோற்சவம் (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 180/- | | |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 135/- | (ஈ) திருப்பாவாடை (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப்படும்) | ரூ. 2000/- |
| (ஊ) தோசை | ,, | ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) | |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 150/- | | |
| (ஏ) ஸீரா | ,, | ரூ. 300/- | | |

* திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

# நாரதரும் வால்மீகியும்

**यच्छोकमोहरहितं जरामरणवर्जितम् ।
पुनरावृत्तिरहितं तद्विष्णोः पदमाययौ ॥**

இராமாயணம் கதையோ அல்லது சிலரைப் பற்றிய வரலாறோ அல்ல; ஒவ்வொருவனும் தன் வாழ்வில் நடத்த வேண்டிய ஞான யோகமே இராமாயணம் என்றறிந்தோம். வேதத்தின் ஞான காண்டப் பகுதிக்கு விளக்க உரை போன்றது இராமாயணம் எனலாம். தீயும் சூடும் போல் இவ்விதிகாசமும், அதன் விஷயமாகிய ஞானயோகமும் பிரியா நிற்கின்றன. இந்த இதிகாசத்தின் ஒவ்வொரு பதமும், ஒவ்வொரு சுலோகமும், இதன் அமைப்பும் யாவுமே ஆர்ஷம். இது ஆர்ஷ வித்தை. அறிந்து அனுபவத்தில் கொண்டு வரப்பட வேண்டிய பிரம்ம வித்தை.

வேதம் துவங்கி எல்லா சாஸ்திரங்களும் 'ருஷிப்ரோக்தம' என்று சொல்லப்படும். அதாவது யோகப் பயிற்சியினின்று எழுந்த அனுபவ விளக்கங்கள். யோக சாதனையிலும் ஈடுபடாமல், சாஸ்திர விசாரமும் செய்யாமல் அஞ்ஞான அவஸ்தையில் இருக்கும் நாம, சாஸ்திரங்களில் காட்டப்பட்டிருக்கும் பாதை வழியே விழிப்புடன் பயணிக்க முயன்றால், பயிற்சியின் மூலம் இந்த நெடும் பயணத்திற்கு நம்மைத் தகுதியாக்கிக் கொண்டால் இவ்விளக்கங்களின் உண்மைத் தன்மையை உணரலாம்.




வெளி நாடு சென்று வந்த ஒருவர் தனது பயண அனுபவங்களைத் தொகுத்துப் புத்தகமாக வெளியிடுவது போன்று, அந்தர்முக ஞான யாததிரையில் பயணித்தவர்களின் அனுபவத் தொகுப்பே சாஸ்திரங்கள்.

முதன் முதல் தனியே வெளி நாடு செல்ல விரும்பும் ஒருவன் சிறந்த முறையில் எழுதப்பட்டிருக்கும் பயணக் கட்டுரைத் தொகுப்பைப் படித்தறிந்து, அதனைத் துணையாயும் கொண்டு வெளிநாடு செல்கிறான். செல்லும் வழிகளிலும், பல நாடுகளிலும் தான் பெறும் அனுபவங்களை இக்கட்டுரைத தொகுப்பிலுள்ள அனுபவங்களோடு ஒபபிட்டுக் காண்கிறான். தன் பயணத்தின சீர்மையையும் உறுதிப்படுத்திக கொள்கிறான்.

திரு. ந. இராமன்-கும்பகோணம்

இது போன்றே அந்தர்முக ஞான யாத்திரை துவங்கும் சாதகன் இராமாயணம், வேதம் முதலான சாஸ்திரங்களைத் தனக்கு வழிகாட்டிகளாக, துணையாக ஏற்றுக் கொள்கிறான். இந்த யாத்திரையில் தான்

பெறும் அனுபவங்களை அவ்வப்போது இவற்றில் காணப்படும் தர்சனங்களோடு ஒப்பிட்டுக் காண்கிறுன். தன பாதையின சீர்மையை நிர்ணயம் செயது, மேன்மேலும் பயணிக்கிறுன்.

ஆசார்ய உபதேசத்தால் சுருதி (கேளவி) மாததிரமாயிருந்த ஞானம் இந்நிலையில் அனுபவத்திற்கு வந்து விடுகிறது. சுருதி எனப்படும வேதத்திற்கு இராமாயணம் விளக்க உரையாயமைகிறது என்பதையும இந்நிலையில் சாதகன் உணாகிறுன்.

அஸ்தி ப்ரஹ்மேதி சேத்வேத பரோக்ஷ
ஞானமேவ தத் ‖
அஹம ப்ரஹ்மேதி சேத்வேத
ஸாக்ஷாத்காரஸஸ உச்யதே ‖

ருஷிப்ரோக்தஙகளை அனுபவத்தில் உண்மையாயறிந்த சாதகன் ரிஷியாகி விடுகிறுன். அனுபவ ஞானியாகிறுன்.

பிரம்ம வித்யையைக கூறும்வேதம் முதலான எல்லா சாஸ்திரங்களும் குரு சிஷ்ய ஸம்வாத ரூபமாகவே அமைக்கப்பட்டிருககின்றன. நேரடியாக குரு சிஷ்ய ஸம்வாத வடிவில் சொல்லப்படாத இடங்களில்கூட இவ்வாறே எடுத்துக் கொள்ள வேணடும் என்று பூர்வாசாரியர்கள் கூறுவர். 'சிஷ்யாசார்ய ப்ரச்ன ப்ரதிவசன ரூபேண கதனம் து ஸூக்ஷ்ம வஸ்து விஷயத்வாத்ஸுக ப்ரதிபத்தி காரணம் பவதி'. மணம் மலரைப் பற்றி நிற்றலையே தர்மமாக உடைத்திருந்தாலும், மணத்தைக் கொண்டே மலர் பெருமை பெறுவதுபோல் சாஸ்திரங்கள் குரு சீடர்களைக் கொணடே பெருமை பெறுகின்றன.

அறியாமையாகிற இருட்டை நீக்கும் அனுபவ ஞான விளக்கே குரு என்ற சொல்லால் சொல்லப்படும். ஞானம் பெறவும், யோகம் பயிலவும் ஏற்புடைய தகுதியைப் பெற்றிருக்கும் புத்தி அல்லது அறிவுத் திறனே சீடன் என்பதால் சொல்லப்படும்.

இவை அனைத்தையும் இராமாயணத்தின் முதல் சுலோகம் மிகத் தெளிவாய் சூத்திர வடிவில் சொல்லி விடுகிறது. இது,குரு சிஷ்ய ஸம்வாத வடிவில் அமைககப்பட்டிருக்கிறது. இந்த சுலோகம் நாரதர், வால்மீகி என்ற இரு ரிஷிகளை நமக்கு அறிமுகப்படுத்தும் வாயிலாக உபதேசத்தைத் துவக்குகின்றது. இந்த சுலோகத்தின் பொருளை அறியுமுன் நாரதர், வால்மீகி இருவர் பற்றியும் அறிதல் இன்றியமையாததாகின்றது.

இராமாயணத்தை வால்மீகி இராமாயணம் எனறு கூறுகிறோம். எனன பொருள்? நம்மைப் போன்று ஆதி காலத்தில் வால்மீகி என்ற பெயருடைய கவியொருவர் இருந்தார். அவருக்கு நாரதர் என்ற ஒருவர் வந்து இராம காதையை உபதேசித்தார். உடனே இவர் இதனை இருபத்து நான்காயிரம் சுலோகங்களில் கவினுற அமைத்தார். இதனுல் இந்நூலுக்கு வால்மீகி இராமாயணம் என்று பெயர் ஏற்பட்டது என்று சொல்லலாமோ, எனின், அது பொருத்தமாகத் தோன்றவில்லை. ஒவ்வொரு சாதகனும் யோகப் பயிற்சியினுல் வால்மீகி என்ற நிலையை அடைந்து, வால்மீகியாகி, ஆத்மாராமனை அறிய முயலும் ஞான சாதனமே இராமாயணம் ஆதலின், இது வால்மீகி இராமாயணம் என்று அழைக்கப்படலாயிற்று. எம். ஏ., எம்.எஸ்.சி., தேர்வுகளில் வெற்றி பெற்றவன்தானே மேலே ஆராய்ச்சி செய்து 'டாகடர்' பட்டம் பெற முடியும். 'வால்மீகி' என்ற அனுபவ நிலையை அடைந்தவனே இதனை நடத்துகின்றுன் ஆதலின் இது இப் பெயர் பெற்றது. ஒரு பட்டதாரியைப் பார்த்து இவர் எம்.ஏ., இவர் எம்.எஸ்.சி., இவர் பி.ஏ. என்று கூறுவதைப் போன்றதே சாதகனையும் வால்மீகி என்று கூறுவது.

'தபஸ்வாத்யாய நிரதம்' எனத் துவங்கும் முதல் சுலோகத்தை எழுதுவது யார்? நாரதரை வால்மீகி ஸேவித்துக் கேட்டார் என்றிருக்கிறதே? வால்மீகி என்ற கவியே தன்னை இவ்வாறு கூறிக் கொண்டார் எனறு சொல்வதா? மேலும் இராமாயணத்தின் பல இடங்களிலும் வால்மீகி எனற சொல் வருமிடங்களிளெல்லாம் அப்பதத்திற்கு முன் தர்மாத்மா, மஹாத்யுதி, பகவான், ரிஷி, மஹா ப்ராஞுஞன் போன்ற விசேஷணங்கள் காணப்படுகின்றனவே? இந்நூலை வால்மீகி என்ற ஒருவர் எழுதினுர் என்று கூறினுல் தன் பெயருக்கு முன் இத்தகைய விசேஷணங்களைச் சேர்த்துக்கொண்டிருப்பாரா? எனவே, இந்நூல் வால்மீகி என்ற ஒருவரால் எழுதப்பட்டது என்று கூறுவது பொருந்தவில்லை.

சரி, நாரதர், வால்மீகி இருவரையும் தவிர்த்த சாக்ஷியாயிருந்த மற்றொருவர் இதனை எழுதியிருக்கலாமோ எனின், அதற்கு ஏதும் ஆதாரமுமில்லை, பொருத்தமும் ஏதுமில்லை. வேதம் முதலிய பதினுன்கு வித்யைகளுமே இறை வடிவம், பிரம்ம வித்யை என்று சொல்லப்படுவதால் வேதத்தைப் போன்று இராமாயணத்தையும் 'அபௌருஷேயம்' என்றே கொள்ள வேண்டும். 'இதம் பவித்ரம் பாபக்னம் புண்யம் வேதைஸ்ச ஸம்மிதம்' என்ற இராமாயண வாக்கியமே இதனை உறுதிப்படுத்துகிறது. மேலும் இந்நூலில் யாங்கனும் வால்மீகி என்ற சொல் படர்க்கையிலேயே பயன்படுத்தப்பட்டுள்ளது. வேதமும் இது போன்றதே. 'அக்னி மீளே புரோஹிதம்' என்று வேதம் துவங்குகின்றது. 'புரோஹித ரூபமான அக்னியை யஜிக்கிறேன்' என்று பொருள். இது யாரால், யாரைப் பார்த்துச் சொல்லப்பட்டது? பாவத்தை நீக்கி பரமபதத்தை அருளுகின்ற இராமாயணம் உண்மையில் வேதம் போன்றே அபௌருஷேயம்.

அதிகாரியான, அதாவது கர்மத்திறுலும் உபாசனத்திறுலும் சித்த சுத்தி பெற்ற சீடன் இராமாயணம் தெரிந்து கொள்ள வேண்டும் என்று கேட்டதற்கு ருஷித்வ அனுபவ ஞான

முள்ள குரு முதல் சுலோகத்தைச் சொன்னார் என்பது கருத்து. சாதாரண புருஷ அறிவினின்றும், அதன் முயற்சிகளினின்றும் எழும் அறிவின் குறைபாடுகளுடன் சேர்ந்திருக்கும் புருஷத்வ ஞானம அல்ல இந்த உபதேசம். ஸாக்ஷாத்கார அனுபவத்தினினறுவரும் அதிமானஸ, அபௌருஷேய சிருஷ்டி.

சரி, நாரதர் யார்? வால்மீகி யார்? இவ்விருவரும் ரிஷிகள் என்று சொல்லப்படுகின்றனர். ரிஷி என்ருல் யார்? செல்லுதல், கேட்டல், ஸத்யம், தவம் என்ற பொருள்களைத் தரும் தாதுவினின்று எழுந்த 'ருஷி' என்ற சொல் பிரம்மத்தினிடத்து அழைத்துச் செல்லும் அல்லது பிரம்மத்தைக் காட்டுவிக்கும் வேத ஞானத்தை, புத்தி சக்தியைக் குறிக்கும்.

ரிஷீத்யேஷ கதௌ தாது: ச்ருதௌ
ஸத்யே தபஸ்யதா |
ஏதத் ஸந்நியதே தஸமிந் பரஹமணு
ஸ ரிஷி: ஸமிருத: ||

'சிருஷ்டியின் துவக்கத்தில் ரிஷிகளே உண்டானர்கள் என்று சொல்லப்படுகிறது. ரிஷிகள் என்பவர்கள் யார்? பிராணன்களே ரிஷிகள்.' இவ்வாறு சதபத ப்ராஹ்மணம் கூறும்.

ருஷயோ வாவ தே அக்ரே ஸதாஸந்|
ததாஹு:
கே தே ருஷய இதி? ப்ராணு வா
ருஷய: ||

இந்த பிராணன்களுக்குத் தாடி, மீசை ஒட்ட வைத்து ஸ்தூல வடிவம கொடுக்க முடியுமா? எனவே 'ரிஷி' என்பது மனித வடிவிலுள்ளவர்களைக் குறிக்கவில்லை என்று தெரிகிறது.

இக்கருத்தின்படி நாரதர் யார் என்று காண்போம. 'நாரம் ததாதி இதி நாரத: ||' நாரத்தைக் கொடுப்பவர் நாரதர். நாரம என்ருல் என்ன? 'நாராஜ்ஜாதாநி தத்வாநி நாரா இதி ஜகுர்புதா: ||' இருபத்து நான்கு தத்துவங்களுக்கும் அடிப்படையாயிருக்கும் தத்துவமே 'நாரம்' என்பதால் சொல்லப்படும். இருபத்து நான்கு தத்துவங்கள் யாவை? கர்மேந்திரியங்கள் ஐந்து, ஞானேந்திரியங்கள ஐந்து, பிராணன்கள ஐந்து, தன்மாததிரைகள் ஐந்து, மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற அந்தக் கரணங்கள் நான்கு, ஆக தத்துவங்கள் இருபத்து நான்கு.

இந்த இருபத்து நான்கு தத்துவங்களுக்கும் அடிப்படையாக, ஆதாரமாக இருக்கும் தத்துவம் 'மஹத்' தத்துவம். எனவே நாரம் என்பதால் மஹத் தத்துவம் சொல்லப்படுகிறது. நாரதர் என்பது மஹத் தத்துவம். இவர் எப்போதும் வீணை வாசித்துக் கொண்டிருக்கிறார். அதன் பெயர் 'மஹதி'. மஹத் தத்துவம் எப்போதும் க்ஷேத்ரஞ்ஞனுகிய நாராயணனின் பெருமையையே கீதத்துடன் ஸ்மரித்துக் கொண்டிருக்கிறது என்று பொருள். இத்தத்துவம் அதிக நேரம் உலக விவகாரங்களுடன் சல்லாபிக்காது, சல்லாபிக்க முடியாது. பரமனையே பற்றி நிற்கும் பரமை காந்தி தத்துவம். நாரதரைப் பற்றிய இதிகாசங்கள் இக்கருத்தை செவ்வனே விளக்கும். 'ரணயந் மஹதீம் வீணும் காயந் நாராயணம் ஹரிம'.

மஹத் தத்துவத்திற்கு அடுத்து கீழ் நிலையில் இருப்பது அகங்கார தத்துவம். இது மஹத் தத்துவத்திற்கு எதிரிடையான இயல்புடையது. யோக சாதனையில் சாதகனிடத்து 'மஹத்' தத்துவம் அகங்கார தத்துவததை அடக்க முயலுமபோது, பல ஸமஸ்காரங்கள ஏறிய அஞ்ஞானத் தடிப்பினல் பலவாற்ருலும் சண்டை சச்சரவுகளில ஈடுபடுகிறது. இதனைத்தான இதிகாசமாக 'நாரத: கலஹப்ரிய:', நாரதர் கலகததை உணடு பண்ணுவதில் விருப்புள்ளவர் என்று சொலவர்.

மிக உயரிய தத்துவமான இம் மஹத் தத்துவமே அதிபூதம் என்று சொல்லப்படும. இதற்கு அதிஷ்டாதாவாக இருக்கும் க்ஷேத்ரஞ்ஞன் என்று சொல்லப்படும் 'ஸப்தபிரம்மம' ஒவவொரு ஜீவனிடத்தும் 'பிரத்யகாத்மன்' என்ற பெயரில் உறைகிறது. இதுவே இராமாயண நாயகன் ஆத்மா இராமன்.

இராமாயணம் நடத்த முதற்கண் இந்த மஹத் தத்துவமே காரணமாகின்றது என்பதையே இராமாயணத்தின் முதல் சுலோகம தெளிவாக்குகிறது. இதே கருத்தில்தான் முதலில் பாகவதத்தை நாரதர் வியாசருக்கு உபதேசித்தார் எனறும் சொல்லப்படுகிற

மஹத் தத்துவம் இரு தன்மைகளில் செயற்புரிகின்றது. மனதோடு இணைந்து நிற்கும்போது ஸங்கல்பமாகவும், புத்தியோடு சேர்ந்து செயற்புரியும் போது 'அத்யவ சாயம்' என்றும் அறியப்படுகிறது.

மஹான் ஸ்ந்ஷ்டிம விருநதே
சோத்யமா நஸ்ஸிஸ்ருக்ஷயா |
ஸங்கல்போ அத்யவஸாயச்ச தஸ்ய
விருத்தித்வயம் ஸ்மிருதா ||

விருத்தி ஞானம் எழும் காலத்தில் மனம் சித்தத்தையும், புத்தி அகங்கார தத்துவத்தையும் தம்முள் அடக்கிக் கொள்கின்றன. சித்தத்தைத் தன்னுள் கொள்ளும் மனதின் விருத்தி ஞானமும், அதன் செயல்களும் பாரதத்திலும், பாகவதத்திலும ஸோம வம்ச சரித்திரம் என்று இதிகாசமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. அகங்காரத்தை உள்ளடக்கிய புத்தியின் விருத்தி ஞானமும், அதன் செயல்களும் இராமாயணத்தில் சூரிய வமச சரித்திரம் என்று இதிகாசமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. மஹத் தத்துவம் நாரதர் வாயிலாக உபதேசிக்கப்படுவதாக சம்பிரதாயமாக சொல்லப்படுகிறது.

'ருஷி வை ப்ரஞ்ஞா: ||' என்று நிருகதம் கூறும். ரிஷி என்ருல் பிரஞ்ஞை. மஹத் தத்துவத்திற்கு ஒருவனை யோக சாதனையின் மூலம் அழைத்துச் செல்லும்

(28-ம் பக்கம் பார்க்க)

## 19. திருமலர் மார்பா!

''குத்து விளக்குகள் நாற்புறமும் சுடர் விட்டு ஒளிர, யானைகளின் தந்தங்களைக் கொண்டு உருவாக்கப்பட்ட கால்களை உடைய கட்டிலின் மேலே, மெத்து மெத்தென்று மிருதுவாயிருக்கும் பஞ்சு மெத்தையின் மேல் இருந்து... சூடாமணி ஆகிய அணிகளை அணியப் பெற்று — கூந்தலில் தேன் மலர்களைக் கொத்துக் கொத்தாகச் சூடி இருக்கும்... பூங்குழலை உடைய நப்பின்னையே!...

உன் எழிலும் அழகும் பெற்று விளங்கும் மார்பகத்தின்மீது, தன் தலையை வைத்து இரு கணணின் இரு இமைகளும் தழுவிட, கண் வளரும், அணிமணி மலர் மாலைகள் புரளும் பரந்தத் திருமார்பினை உடையவனே! உன் திருவாய் திறந்து ஒரு வார்த்தை பேசக்கூடாதா?... கரு'மை'த் தீட்டிய அஞ்சன விழியாளே! நப்பின்னையே! நீ உன்னுடைய மணாளனை, துயில் உணர்த்தி எழுந்திருக்கச் செய்யாமல் இருக்கிறாயே! ஒரு கணம் என்றாலும்—கண்ணிமை நேரம் என்றாலும்—உன் மணாளன பிரிவைத் தாங்கவல்ல வலிமை அற்றவளாயிருக்கிறாயே! நீ இப்படிச் செய்வது உன் ஸங்கல்பத்திற்கும் ஏற்றதல்ல! உன் ஸ்வபாவத்திற்கும் ஏற்றதல்ல!''என்று கனிவுடனும் பணிவுடனும் தேவி நப்பின்னையை எழுப்புகிறாள்.

குத்துவிளக்கெரியக் கோட்டுக்கால் கட்டிலின் மேல்
மெத்தென்ற பஞ்ச சயனத்தின மேலேறி,
கொத்தலர் பூங்குழல் நப்பினனை கொங்கைமேல்
வைத்துக்கிடந்த மலர் மார்பா! வாய்திறவாய்!
மைத்தடங் கண்ணினாய்!நீ உன்மணாளனை
எத்தனை போதும் துயிலெழவொட்டாய் காண்
எத்தனை யேலும் பிரிவாற்ற கில்லாயால்!
தத்துவ மன்று தகவேலோ ரெம்பாவாய்!

எப்படியும் கண்ணனை எழுப்பியாக வேண்டும். கண்ணனின் கருணை கிடைக்க,முதலில் அவன் தேவியின் அருள் கிடைக்க வேண்டும். எனவே அவளது பேரெழிலை...,பேரன்பைப்போற்றிய கோதை அவளது பலவீனத்தையும் இலேசாக எடுத்துக் கூறுகிறாள். யானைத் தந்தம் போன்று உறுதியும் உயர்வும், இலவம் பஞ்சு போன்ற மென்மையும் கனிவும் கொண்ட எங்களது மனதில்... கண்ணனே... கார்முகில் வண்ணனே நீ வந்து ஏறி அமர்வாயாக என்று கூறாமல் கூறி அழைக்கின்றாள் ஸ்ரீ ஆண்டாள்.

கதிரவன் உதயத்திற்கு முன் சூடிய மலர்கள் உதயத்திற்குப் பின் வாடிவிடுகிறது. உணமை இவ்வாறு இருக்க, இரவெல்லாம் நப்பின்னையின் கூந்தலில் சூடிய மலர்கள், இரவு முழுவதும் உறங்கி, மறுநாள் அதிவிடியற்காலையில் எழும்பொழுதும் சற்றும் வாடாது வதங்காது அனறலர்ந்த... நிலையிலேயே இருக்கிறது எனறால் இஃது எவ்வாறு சாத்தியமாகும்?

பகவானின் கண், கால் எது பட்டாலும் கல்லும் கனியாகும், கன்னியாகுமனறோ! அவ்வாறே, கணணனின் அருள் கொழிககும் காந்தக் கண்கள் நப்பின்னையின் அருகிலேயே—அந்த இரவு முழுவதும் இருநததால் அவள் சூடிய மலர்கள் வாட்டம் அடையவில்லை; அவ்வாறே பகவான கடைக்கண அருள் கிடைத்தால் எங்கள் மனங்கள் யாவும் துன்பத்தில் வாடாது வதங்காது இறைவனின பேரின்ப திருவருளையே நோக்கி மலர்ந்திருக்கும்—என்று மிகவும் நுட்பமாக இக் கருத்தை ஸ்ரீகோதை குறிப்பிடுகின்றாள், அந்த வரிகளில்.

இல்லற இனிய வாழ்க்கையாவது, அன்புக் கணவன் ஒருவனும், ஆசை மனைவி ஒருத்தியும், எப்படி 'ஓருயிர் ஈருடலாய', உண்மையான பறறுடன், ஆழ்ந்த அனபுடன் வாழ்வது. இருவருக்கும் உள்ள நெருக்கத்தை உருக்கத்தை ''கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர் மார்பா'' என்ற அழகான சொற்களின்மூலம் எடுத்துக் காட்டுகிறாள்.

அழகு, குளிர்ச்சி, மென்மை, வெணமை, பரிமளம் ஆகிய ஐந்து குணங்களுடன் பொலிவுற வேண்டும் பஞ்சு, பட்டு, கம்பளம், மலர், தளிர் ஆகிய ஐந்து வஸ்துக்களால் ஆக்கப்பட்டதே 'பஞ்ச சயனம்' என்பர் சான்றோர். இப்பாசுரத்தில் உலக மக்களுக்கு, இல்லற இன்பத்தில்—தர்மத்தில் ஓர் ஆண் மகனும், பெண் மகளும் எப்படி ஒருவர் நெஞ்சத்தினுள்ளே ஒருவர் புகுந்து அன்னியோன்னியமாய் வாழ்வது என்பதைப் பற்றியும் இவ்வாறே அடியவர்களும் பகவானும் எப்படி இருக்க வேண்டும் என்பதைப் பற்றியும் தெளிவாக விளக்குகிறாள் ஸ்ரீகோதை. அத்தகு பகவானை நாமும் தரிசித்தல் கூடுமோ? கூடும்.

ஆதியான வானவர்க்கும் அண்டமாய் அப்புறத்து
ஆதியான வானவர்க்கும் ஆதியான ஆதிநீ
ஆதியான வானவாணர் அந்தகாலம் நீஉரைத்தி
ஆதியான காலம்நின்னை யாவர்காண வல்லரே!

என்று வியந்து போற்றி வணங்கிடும் திருமழிசை ஆழ்வாரே போன்று நாமும் துதித்து வணங்கிடுவோமாக.

# 20. வெப்பம் கொடுக்கும் விமலா !

"முப்பத்து மூன்று கோடி தேவர்களுக்கும், பிரம்மா, அரன், இந்திரன், சந்திரன், சூரியன், வருணன், குபேரன், காலன், வாயு, அக்நி போன்ற தேவாதி தேவர்கட்கும்—'துன்பம்' என்று 'ஒன்று' வருவதற்கு முன்னமேயே, அவர்கள் நினைத்த மாத்திரத்தில் அவர்களுடைய அச்சத்தை அழிக்கின்ற கண்ணபிரானே! துயில நீங்கி எழுந்திருப்பாயாக!

மனம் மொழி மெய்யால், தம் உடல் பொருள் ஆவியை அர்ப்பணித்து உன்னையே தியானித்துக் கொண்டிருக்கும் அடியவர்களைக் காப்பாற்றித் தர்மத்தின் உருவானவனே! அடியவர்களுக்குத் துன்பம் தந்து பகைத்தவர்களுக்கு, எதிரிகளுக்கு கனவிலும் நனவிலும் 'அச்சத்தை'த் தரும் குற்றமற்ற பரிசுத்த பண்பாளனே! உன் இனிய உறக்கம் நீங்கி எழுந்திருப்பாயாக!

பொற்கலசம் போல் தகதகவென்று ஒளிர்ந்திடும் ஸ்தனங்களையும், மென்மையான செந்நிறமான, செம்பவள சிவந்தத் திருவாயினையும், பருத்த தனங்களைத் தாங்கும் சிறுத்த சீர்மை பெற்ற நுண்ணிய இடையையும் வாய்க்கப் பெற்ற திருவே! நப்பின்னைப் பிராட்டியே!எங்கள் 'பாவை நோன்பிற்கு' மிகவும் இன்றியமையாத பரிமள சுகந்தத்தைத் தரவல்ல பொன் வண்ண விசிறியையும், ஆடியையும் தந்து, உன் மனம் நிறைந்த மணவாளனாகிய எம்பெருமானை கண்ணபிரானையும் தந்து, இந்த நேரமே எங்களை மங்கள ஸ்நானம் செய்விக்கச் செய்வாயாக" என்று பணிந்து கனிந்து நப்பின்னையின் திருவருளை வேண்டுகின்றாள் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாள்.

முப்பத்து மூவர் அமரர்க்குமுன் சென்று!
கப்பம் தவிர்க்கும் கலியே! துயிலெழாய்!
செப்பமுடையாய்! திறலுடையாய்! செற்றார்க்கு
வெப்பம் கொடுக்கும் விமலா! துயிலெழாய்!
செப்பன்ன மென்முலைச் செவ்வாய்ச் சிறுமருங்குல்
நப்பின்னை நங்காய்! திருவே! துயிலெழாய்!
உக்கமும் தட்டொளியும் தந்துன் மணாளனை
இப்போதே யம்மைநீ ராட்டேலோரெம்பாவாய்

தன்னையே நம்பி—தனக்காகவே வாழ்ந்த—தன் உயர்ந்த போற்றுதலுக்குரிய புகழினைப் பாடிப் பரவி இந்நிலவுலகில் நிலைத்திடச் செய்த அடியவர்களுக்கு அருள் தருவதோடு மட்டுமின்றி அவர்களுக்கே அடியவனானான். எடுத்துக் காட்டாகக் குசேலரைக் கூறலாம்.

'செற்றார்க்கு வெப்பம் கொடுக்கும் விமலா', அதர்மத்தை மேற்கொண்ட இரணியன், 'தெய்வமே தான்தான்' என்றான். பிரகலாதனுக்குச் சொல்ல இயலா துன்பங்களை அளித்தான். எதற்கும் அஞ்சாது பாலகனோ பகவானையே விதியென—கதியென வணங்கிப் போற்றி ஒழுகினான். அதன் பலன்? அடியவர்க்காக—எதிர்த்து அழித்தொழித்து அருள் புரிந்தார் பகவான்.

கண்ணன் முன்பு புரிந்த வீர தீர சாதனைகளை எடுத்துக்கூறி எழுப்பிட முயற்சிக்கின்றனர் பாவையர்கள். அவனுடைய துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனப் பெருமையிலே சிஷ்ட பரிபாலனச் சிறப்பை முறபட எடுத்துக் கூறி, கண்ணனின் கருணை உள்ளத்தைப் பாராட்டித் துயிலெழ வேண்டுகின்றனர்.

"துன்பம் வருவதற்கு முன்னமேயே தேவர்களின் குறிப்புணர்ந்து விரைந்து சென்று ரக்ஷிக்கின்றாய் .. வலிய சென்ற அங்கு ரக்ஷிக்கும்... உன் வாசலிலே வலிய நாங்கள் .. அபலைகள்... பாவையர்கள் வந்து வணங்கி இறைஞ்சுகின்றோம் .. உன்னைக் காண ஆசைப்படும் எங்களுக்கு உதவலாகாதோ?' என்று கூறாமல் கூறி வேண்டுகின்றனர். அகப்பற்று, புறப்பற்று இவற்றின் நிவர்த்தியை எங்களுக்குத் தந்து, ஸ்வரூப ஞானத்தையுமளித்து, பகவானை எங்களோடு சேர்ப்பிக்க வேண்டுமே—என்று லோக மாதாவாகிய பிராட்டியை நோக்கி ஸங்கல்பிப்பது இப்பாசுரத்தின் கருவாகும். பற்று ஆசை ஆகியவற்றை உள்ளும் புறமும் கைங்கரியக் காலத்திலே விசிறித் தள்ளுவதற்கு அறிகுறியாக விசிறியாகிய ஆலவட்டமும், பகவானின் ஸ்வரூப ஞான ஒளியைத் தரிசிக்கக் கண்ணாடியையும் தேவை என்பதை கோதை நன்கு உணர்த்துகிறாள். எல்லா தேவாதி தேவர்களை ரக்ஷிக்கும் பகவானின் திருமேனியை,

நீயே உலகுஎல்லாம் நின்அருளே நிற்பனவும்
நீயே தவத்தே தேவனும் - நீயே
எரிசுடரும் மால்வரையும் எண்திசையும் அண்டத்து
இருசுடரும் ஆயஇவை,—.

என்று திருமழிசையாழ்வார் போற்றி வணங்குவதே போன்று நாமும் பகவானின் திருவடியினை சித்தத்திலே நிலைநிறுத்தித் தியானித்துச் சகல செல்வங்களையும் பெறுவோமாக.

(23-ம் பக்கத் தொடர்ச்சி)

புத்தி சக்தி மகரிஷி.மகரிஷிகளே நாரதரை தரிசிப்பர் என்பது இக் கருத்தில் சொல்லப்பட்டதே.

நாரதர் என்பவர் மானுட வடிவந் தாங்கிய ஒருவர் இல்லையெனின், வால்மீகியும் அவ்வாறே தான் இருக்க வேண்டும். 'தபஸ்வீ வால்மீகி':என்று முதல் சுலோகம் கூறுகிறது. வால்மீகியின் இதிகாசத்தை அறிந்தால் இவர் யார் என்பது விளங்கும்.

வால்மீகியைப் பற்றி மூன்று பிறவிகள் சொல்லப்படுகின்றன. முதற் பிறவியில் இவன் ஸகலா என்ற நகரில் ஒரு அந்தண குலத்தில் பிறந்தான். ஸ்தம்பன் என்பது இவன் பெயர். நன்கு கற்று, பண்டிதனாக ஆனான். எனினும் சீலமுடன் வாழவில்லை. நற்குலத்தில் பிறந்த நற்குண நங்கை ஒருத்தியை மணந்து கொண்டான். போக வாழ்வு வாழ்ந்த இவன் ஒரு நாள், காலன் கூப்பிடவும், சென்றுவிட்டான்.

அடுத்த பிறப்பில் இவன் ஒருவேடனாகப் பிறந்தான். இவனிடத்து நேசங் கொண்ட தாசியும் மரித்த பின், அவள் வேடர் குலத்திலேயே பிறந்து, இவனைக் கணவனாகப் பெற்றாள். இங்கும் இவன் போக வாழ்வு வாழ்ந்து உலக வாழ்வு நீத்தான்.

இதற்கு அடுத்த பிறவியில் இவன் 'கிருணு' என்ற ரிஷியின் மூலம் கர்ப்பந் தரித்த ஒரு பெண் பாம்பிடம் மகனாய்ப் பிறந்தான்.

கிருணு என்ற முனிவர் தவம் செய்து கொண்டிருந்தார். ஒரு நாள தவம் முடிந்து தன் கணகளைத் திறந்தார். கணகளினின்று தவத்தின வீரியம் ஒளியாய் வெளிப்பட்டது. அவ்வமயம் தற்செயலாக எதிரே வந்த பெண் நாகம் ஒன்று அவ்வொளிக் கற்றையை தன்னுள் ஈர்த்துக் கொள்ளவும், அது கர்ப்பவதியாயிற்று. வால்மீகி உண்டானார்.

வ்யாத ஜன்மாத்யயே ஜாதே க்ருணே: புத்ரஸ்த்வஹம் தத: |
புந்நகி ஜடரோத்பூதஸ்த்வாரண்யோரகு நந்தன ||

இந்நாகத்திற்குப் பிறந்த குழந்தையை வேடர்கள் எடுத்து வளர்த்தனர். வாலிபனாக ஆனபின் ஒரு சூத்ர ஸ்திரீயை மணந்து கொண்டு அவள் மூலம் பல குழந்தைகளைப் பெற்றுப் பெருங்குடும்பியாய் வாழ்ந்தான். தன் பெரிய குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டி கொள்ளையர்களுடன் சேர்ந்து கொண்டு வழிப்பறி போன்ற தீய செயல்களில் ஈடுபட்டான்.

ஒரு சமயம் இவன் ஸப்தரிஷிகளைச் சந்தித்தான். அவர்களை வழிப்பறி செய்ய எண்ணி அச்சுறுத்தினான். அவர்கள் இவன் தீச்செயலைக் கண்டித்தனர்,கடிந்தனர். அவர்கள் தூய்மையின முன் இவன் தன தொழில் மறந்தான்.

'என் குடும்பத்தைக் காக்கவே நான் இவ்வாறு வழிப்பறி செய்கிறேன்' என்று கூறினான்.

உடன் ஸப்த ரிஷிகள் இவனை நோக்கி, 'வேடனே! நீ இல்லம் திரும்பு. உன் குடும்பத்தைக் காக்கத் தானே நீ இந்த இழி செயல் புரிகிறாய். உன்னால் வளம் பெறும் உன் மனைவி மக்கள் இச்செயலால் விளையும் பாவத்தில் பங்கேற்பார்களா என்று அறிந்து வந்து சொல். போ! நாங்கள் இங்குக் காத்திருக்கிறோம்,' என்றனர்.

இவன் இல்லம் சென்றான. இல்லாளைக கேட்டான். 'நீவீர் ஈட்டி வரும் பொருளிலதான் எமக்குப் பங்கும் உரிமையும் உணடு. தீய வழியில் ஈட்டுவதால் பெறப்படும் பாவத்தில் எமக்கு ஒரு போதும் பங்கு கிடையாது. நாங்கள் ஏறகவும் முடியாது', என்றாள்.

இந்தப்பதிலால்நிலைகுலைந்துபோன வேடன், மனம் ஒடிந்தவனாய் ஓடி வந்து ஸப்த ரிஷிகளின் பாத கமலங்களில் வீழ்ந்தான். 'எந்த குடும்பத்தைக் காக்க,ஓடி ஓடித் தவறான வழியிலும் பொருள் ஈட்டினேனோ, அக்குடும்பம் எனக்கு ஒரு போதும் உறுதுணையில்லை என்பதை உணர்ந்தேன், என்னைக் காக்க வேண்டும், அருள் புரிய வேண்டும், நல்வழி காண்பிக்க வேண்டும்' என்று சரணடைந்தான்.

ஸப்த ரிஷிகள் இராம மந்திரத்தை 'மரா' என்று உபதேசித்தனர்.'இதனை இடையறுமல் ஜபித்துவா, நாங்கள் யாத்திரைசெல்கிறோம். திரும்பி வரும்போது உன்னைச் சந்திக்கிறோம். அதுவரையில் தொடர்ந்து ஜபம் செய்து வருவாயாக' என்று கூறிச் சென்றனர்.

எடுத்த காரியத்தைத் துடிப்புடன் செய்து முடிக்க வல்ல வேடனும், ஒரு மரத்தடியில் அமர்ந்தான். மரா, மரா என்று ஜபிக்கத் துவங்கினான். நாட்கள் பல சென்றன. தன்னை மறந்தான், சுற்றும் புறமும் மறந்தான். ஸமாதியில் ஆழ்ந்து விட்டான். வருடங்கள் பல உருணடோடின. பட்ட மரம் போன்று உணர்வற்று அமர்ந்திருந்த இவன் உடலைச் சுற்றிப் புற்றுகள் எழுந்தன.நாளடைவில் புற்றுகள் பெரிதாக வளரவும், இவன் அதனுள் மறைந்து போனான். ஆயிரம் யுகங்கள் இவ்வாறு கழிந்தன. ஒரு நாள் ஸப்த ரிஷிகள் திரும்பினர். இவனைத் தேடினர். ஞானக் கண்ணால் புற்றினுள் இருப்பதை அறிந்தனர். புற்றைத் தகர்த்தனர். வேடனை எழுப்பினர். மெதுவே கண் விழித்து புற்றிலிருந்து எழுந்து வந்த வேடன முனிவர்களை வணங்கினன.

வால்மீகம் என்று சொல்லப்படும் புறறிலிருந்து புதியதொரு பிறவி பெற்றவனாக எழுந்த இவனை ரிஷிகள் 'வால்மீகி' எனப் பெயரிட்டு அழைத்தனர். 'நீ இன்று முதல் புதிதாய்ப் பிறந்தவனாக ஆனாய். இராம நாமத்தின் மகிமையால் புத்தொளிபெற்ற நீ

(43.ம் பக்கம் பார்க்க)

# தன்னைக் கொண்டவனைப் பேணியவள்

அடிக்கடி மதுவினை அணுகும் வண்டு போல் கண்ணிற்பட்ட அவளின் உடலழகால் கவரப்பட்டான் அவன். அவளது குண அழகினைப் பற்றிக் கவலைப்படவில்லை.

ஏதோ ஒரு பாவனையில் தன் எண்ணங்களைப் பலியாக்கிய அவள், புலனுணர்வுகளுக்கு அடிமையாகி விட்டாள். 'மனம்' என்னும் யானையை அறிவாகிய அங்குசத்தால் அடக்க இயலாத நிலைமைக்கு ஆளாகிவிட்டாள். குண அழகினை அழித்து உருவ அழகினைப் பேணிக் கொண்டாள்.

பிணத்தினை விரும்பும் பருந்தினைப் போல் விரைந்து வாழ்க்கை ஒப்பந்தம் செய்து கொண்டார்கள்—ஊரார் பழிச் சொல்லிலிருந்து தங்களது சுயமதிப்பைக் காப்பாற்றுவதற்காக.

'மோகம் முப்பது நாள்', 'ஆசை அறுபது நாள்', என்ற முதுமொழியை ஊர்ஜிதம் செய்தது—சிந்தனையிலீடு படாத அவர்களுடைய உள்ளங்கள். சில நாட்களில் 'சலிப்பான வாழ்வு' என்ற போர்வையினைப் போர்த்திக் கொண்டன.

தனிமை கண்டு பூசல் விளைவித்து இரைக் கூத்தாடிய அவர்களது புலன்கள், 'விரக்தி' என்னும் துயிலணையில் படுத்து ஆணவக் கூத்தாடத் தவறவில்லை. 'வாழ்க்கை ஓர் போர்க்களமே', என்று ஒப்பாரி வைத்துக் கொண்டு ஆறுதலடைந்தது அந்த உள்ளங்கள்.

அந்த உள்ளங்கள் நடத்தும் வாழ்வு ஓர் வாழ்வாகுமா? ஆகாது.

கைப்பிடித்த காதலனின் காரியம் யாவினுங் கை கொடுத்து, மாதரறங்கள் மாட்சி பெறச் செய்யும்படி வாழ்பவளே ஓர் நல்ல மனைவியாவாள். தன் செய்கைகள் அனைத்தையும் கணவனுக்கு இனிதாகச் சமைப்பவளே ஒரு நல்ல மனைவியாவாள்.

'எல்லை நீத்த இவ்வுலகங்கள் யாவையும் ஒரு சொல்லினால் சுடுவேன்; அது தூயவன் வில்லின் ஆற்றற்கு மாசு என்று வீசினேன்', என்று எழு நூறு அரக்கிகளின் மிரட்டல்களுக்கும், வணங்காமுடி இராவணனது மாய வித்தைகளுக்கும் கலங்காமல் வாழ்ந்த நிலையில், தன் கணவன் இராமபிரானின் வில்லறத்திற்குத் தன்னால் குற்றம் வந்து விடக் கூடாதென்று முழக்கமிட்டாள் சீதாப் பிராட்டி. தற்காத்துத் தற்கொண்டானின் தருமத்தையும் பேணினாள் சீதாப் பிராட்டி; அவள் ஒரு நல்ல மனைவியாவாள்.

அந்தச் சீதாப் பிராட்டியைப் போல் தன்னையுங் காத்துத் தனைக் கொண்டவனையும் பேணிக் காத்தாள் சயிபியை. அவள் மகா பதிவிரதை. உருவ அழகும் குண அழகும் ஒருங்கே வாய்க்கப் பெற்றவள்.

சகல லக்ஷணங்களுடன் கூடிய அத்தகைய மனைவியோடு ஜபங்கள், ஓமங்கள், தானங்கள், உபவாசங்கள், அர்ச்சனைகள் முதலியவைகளால் தேவாதி தேவனை ஸ்ரீமந் நாராயணனை ஆராதித்து வந்தான் மன்னன் சததனு.

ஒரு நாள் கார்த்திகை ஏகாதசி உபவாசமிருந்து கங்கையில் ஒரு மிக்க நீராடிக் கரையேறினார்கள் பக்தியுள்ளங்கொண்ட அந்தத் தம்பதிகள். எதிரில் வந்த தீயகுணங்கொண்ட ஓர் துன்மார்க்கனிடம் சேம லாபம் விசாரித்தான் சததனு. அவன் தனக்கு வில்வித்தைக் கற்றுக் கொடுத்த ஆசானின் நண்பனுயிருந்தமையே, அவன் உரையாடல் நிகழ்த்தியதற்குக் காரணமாகும்.

'தீயாரைக் காண்பதுவும் தீதே', என்ற முதுமொழிக் கேற்ப அவனைக் கண்ட ஒரே குற்றத்திற்காக அவனோடு உரையாடாத நிலையிலும் கூட, சூரிய தரிசனம் செய்து கொண்டாள் சயிபியை.

சில காலங் கழித்து சததனு மன்னன் மரண மடைந்தான். அவனது மனைவி சயிபியை உடன் கட்டை ஏறினாள்.

திரு. A. ஸ்ரீராமுலு தேசிகன்;
ஸ்ரீவில்லிபுத்தூர்.

ஏறும் பொழுது நல்ல சிந்தனை, மறுபிறப்பிலும் கணவனது சேவையே தனது வாழ்வின் குறிக்கோள் என்ற தூய எண்ணம், தனது உடலைக் கணவனுக்கே அர்ப்பணித்து அவனது இன்பத்திற்காகவே தான் வாழ வேண்டுமென்ற நிச்சயமான புத்தியுடன் கூடிய தியாகம், அவள் உள்ளத்தில் ஒருங்கே குடிகொண்டிருந்தன. உடலை விடும் தருணத்தில் நற்சிந்தனை, சேவை, தியாகம் என்ற மூன்று பண்புகளும் மூன்று அக்னிகளாக மாறின. அவளுடைய உள்ளத்திலுள்ள அகங்காரத்தைப் பொசுக்கி விட்டன. அந்நிலையில் ஆன்ம நாயகனுக்கு ஆசனம் அளித்து விட்டது அவளது புனித உள்ளம். முற்பிறவியினை உணரும் அறிவினை

# தெரிந்து கொள்ளுங்கள்

## இறைவனுக்குரிய எண் குணங்கள்

1. தன் வயத்தனுதல்
2. தூய உடம்பினனுதல்
3. பொருமையில்லாமை
4. நல்லவைகளில் உறுதி
5. மன மகிழ்வு
6. பேராசையில்லாமை
7. உலோபத்தன்மையில்லாமை
8. தூய்மை.

---

## ஒன்பது பக்தி மாரக்கங்கள்

1. கேட்டல்.
2. பாடுதல்.
3. நினைத்தல்.
4. பாதங்களைச் சேவித்தல்
5. பூஜித்தல்.
6. வணங்குதல்.
7. தொண்டு செய்தல்.
8. நட்பு கொள்ளுதல்.
9. தன்னையே அர்ப்பணித்துக் கொள்ளல்.

தொகுததவர்: திருமதி. கமலா மாரியப்பன்.

---

அவனுல் நன்கொடையாகப் பெற்றுக் கொண்டாள், அந்தப் புனிதவதி.

சயிபியை காசி மன்னனின் மகளாகப் பிறந்தாள் மறுபிறப்பில். எல்லாவிதமான லட்சணங்களும் பொருந்திய அந்த இளவரசி குளிரக் குடைந்து நீராடினுள் நற்குணக் கடலில். ஆன்ம வொளிக் கடலில் மூழ்கித் திளைத்து நிலைத்த மதியில் சிந்திக்கும் சிறப்பினைப் பெற்றுள் தனது பூர்வ ஜென்ம நினைவில்.

அந்நினைவில் தோன்றியது ஒரு நாயும் அது வாழும் விதிசை என்ற நகரமும். இந்நிலையில் தனது மகளுக்குத்திருமணஞ்செய்து கொடுககச் சுயம்வரம் நடத்த முயன்றுன் காசி மன்னன். அந்தமுயற்சியை முறியடித்தாள் அநத இளவரசி. பின்னுல் வைத்துக் கொள்வோம் என்று கூறி விட்டாள். ஏன்?

உடனே விதிசை நகரம் சென்றுள். உரிமையாளரிடமிருந்து விலை கொடுத்துப் பெற்றுள—அந்த நாய்க் குட்டியை. தினந்தோறும் அன்போடும் மரியாதையோடும் கொடுத்து வந்தாள்—அதற்கு நல்ல உணவு வகைகளை. உணடு, காட்டியது—அரசிக்குத் தனது மகிழ்ச்சியினை. அது தன் சாதியியல்பின்படிச் செய்தது—தன் பணிவான செய்கைகளை. அதனைக் கண்டு வெட்க மடைந்தது—அந்தக் காசி நாட்டு இளவரசியின் உள்ளம.

அந்த நாயைக் கும்பிட்டு, 'நீங்கள் ஏகாதசி உபவாச நாளில் கங்கா ஸ்நானம் செய்த பின் சந்தர்ப்ப வசத்தால் ஒரு தீயவனேடு உரையாடினீர்கள். அப்பொழுதேஅதற்குப் பிராயச் சித்தமும் செய்யவில்லை. அந்தப் பாதகமான செயலே தங்களை எச்சில் தின்று வாழும் இந்த ஈனமான நாய்ப் பிறவியில் கொண்டு வந்து தள்ளியுள்ளது. முற்பிறவியில் உமக்கு மனைவியாக வாழ்ந்த என்னை வணக்கமுஞ் செய்கிறீர்கள்', என்று நினைவூட்டினுள் மன்னன சததனுவிற்கு. மன்னனையே இப்பிறவியிலும கணவனுகப் பெற்று, அவனது நலன்களைப் பேணிக் காக்க வேண்டுமென்ற உறுதியான உள்ளத்துடன்தான், தன் தகப்பனுா காசி மனனன ஏற்பாடு செய்து தனக்கு நடத்தவிருந்த சுயம்வரத்தை முறியடித்தாள் அந்த இளவரசி.

அவள் மூலம் உணர்ந்து கொண்ட அந்த நாயுருவான அரசன், ஓடினுன் அந்த நகரத்தை விட்டு; ஏறினுன்—ஓர் மலை மீது; இறந்தான், கீழே விழுந்து; அடைந்தான், ஓர் நரிப் பிறப்பினை.

தன்னைக் கொண்டவனின் ஆத்மா, சூழ்சசியும் வஞ்சகமும் கொண்ட நரிப் பிறப்பிலல்லவா உழன்று கொண்டிருக்கிறதென்பதை அறிந்தாள் அந்த இளவரசி. உடனே அவன் நரி உருவில் வாழும் கோலாஹலம் என்ற மலைக்குச் சென்றுள்.

கும்பிட்டு நினைவூட்டினுள்—நாயுருவில் இருந்த பொழுது ஆத்மா விடுதலைகு அவள் நடத்திய உரையாடலை; நரியுருவிலிருந்த அவனும் நினைவிற்குக் கொண்டு வந்தான்—உபவாச நாளில் தீயவனுடன் தான் நடத்திய உரையாடலை;

நரிப் பிறப்பினை நீக்கும் பொருட்டு இரை எதுவும் தேடாமல் பட்டினிக் கிடந்து உயிர்த் துறந்தான்.

(32-ம் பக்கம் பார்க்க)

# மோக்ஷம் என்றால் என்ன?

"ஆத்ம அநுபவமே மோக்ஷமாகும்" என ஸ்ரீ நம்மாழ்வார் எட்டாம்பத்தில் எட்டாந்திருவாய்மொழி ஆறும் பாட்டில் கூறுவதாவது :

நன்றாய் ஞானம் கடநதுபோய்
நல் இந்திரியம் எல்லாம் ஈர்த்து
ஒன்றாய்க கிடந்த அரும்பெருமபாழ்
உலப்பில் அதனே உணர்ந்து
உணர்ந்து
சென்று ஆங்கு இன்பத் துன்பங்கள்
செற்றுக் களைந்து பசை அறறால்
அன்றே அப்போதே வீடு
அதுவே வீடு வீடாமே! (8:8:6)

இதன் பொழிப்புரையாவது : ஐம்பொறிகளால் அறியப்படுகின்ற ஐம்புல இன்பங்களைக் கடந்து சென்று, கொடிய ஐந்து இந்திரியங்களையும் அடக்கிப் பிரிக்க முடியாதவாறு பிணைந்துள்ள பிரபஞ்சமென்னும் பிரகிருதி தத்துவத்தை ஆத்மாவினின்று வேறுபட்டதாக உணர்ந்து, அதற்கு மேல் ஆத்ம சொருபத்து அளவும் நன்கு சென்று அறிந்து, இன்பதுன்பங்களுக்குக் காரணமான புண்ணிய பாவங்களையும் விட்டு, அவற்றில் உள்ள ஈடுபாடுகளையும் நீக்கினால், நீங்கிய அப்பொழுதே இவ் உலக வாழ்வினின்றும் விடுபடலாம். அப்படி விடுபட்ட அந்நிலையே ஆத்ம அநுபவ மோக்ஷமாகும்.

இத்தகைய மோக்ஷ விளக்கத்தைக் கொடுக்கும் இத்திருப்பாசுரத்தைத் திருவள்ளுவர் அருளிய,

"ஆராவியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும"
(குறள்-துறவறம்.)

என்னும் குறளுக்குப் பரிமேலழகர் தம் உரையில் மேற்கோளாகக் காட்டியுள்ளார். இக்குறளின் பொருளாவது :

ஒரு காலும் நிரம்பாத இயல்பினையுடைய ஆசையினை ஒருவன் நீக்குவானயின், அத்தகைய நிலை அப்பொழுதே ஒரு நிலைமையான மோக்ஷ இயல்பைத் தரும்.

இக்கருத்தைக் கருவூலமாகக் கொண்ட திருவாய்மொழியின் பொருளை அறிவோம்.

நனறாய் ஞானம் கடந்து போய் : ஐம்புல உணர்வு என்னும் இந்திரிய ஞானத்திற்கு அறிய முடியாததாய் இருக்கும் நிலையைக் கடந்து போய்.

நல் இந்திரியம எலலாம் ஈர்த்து - உலகாயுத விஷயங்களிலே அமிழ்த்தும் இந்திரியங்களை எல்லாம் அடக்கி. 'நல் இந்திரியம்' என்பதில் 'நல்' என்பது கொடுமையின் மிகுதியைக் காட்டுகின்றது. 'நல்ல பாம்பு' என்பது போன்று, நல் இந்திரியம் எனச் சுட்டி இந்திரியங்களின் கொடுமையை உணர்த்துகிறார்.

ஒன்றாய்க் கிடந்த அரும் பெரும் உலப்பு இல் பாழ் அதனை உணர்ந்து உணர்நது.அநாதி காலம் முதல் 'நல் இந்திரியங்கள்' ஆத்மாவோடு கலந்திருப்பதான மிகக் கீழான நிலையினை உணர்ந்து, அதாவது பல பிறவிகளில் இவ்வான்மா இந்திரியங்களுடன் கை கோர்த்துப் போகங்களை அநுபவித்த நிலையை உணர்ந்து இன்று 'நல் இந்திரியங்கள்' வழியே மக்களும் விலங்குகளும் செல்வதுதான் சாதாரணமாக நாம் தினமும் காணும் காட்சிகள். இதனைக் கடப்பது அரிது. ஆகவேதான் பகவான் ஸ்ரீ கிருஷ்ணரும் ஸ்ரீ கீதையில்

"என்னுடைய மாயை தாண்ட
முடியாதது"
("தைவீஹ்யேஷா குணமயீ மம மாயா
துரத்யயா
மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாம்
ஏதாம் தரந்தி தே"
என்பது ஸ்ரீ கீதை 7:14.)

என அருளுகிறார்.

ஆங்கு நன்றாய் சென்று - "நல் இந்திரியங்களில்" இனிமையுண்டு என்னும் எண்ணத்தில் நில்லாமல் ஆன்ம சொருபத்தை அறியச் சென்று.

இன்பம் துன்பஙகள் செற்றுக் களைந்து - 'நல் இந்திரியக்' கவர்ச்சிகளை விட்டாலும் சுகதுக்கங்களுக்குக் காரணமான புண்ணிய பாபகர்மங்கள் கிடைக்குமாகில் மறுபடியும் பிறப்பிலே தள்ளும். அதனால் அவற்றையும் விட்டு.

அன்றே அப்போதே - அக்காலத்திலே அம் முகூர்த்தத்திலே

வீடு - பிரகிருதி சம்மந்தத்திலிருந்து தொடர்புகள் அறுந்து போகும்.

அதுவே வீடு - "அற்றதுபற்று எனில் உற்றது வீடு உயிர்" என்கிற படியே, பிரகிருதி சம்மந்தப்பட்ட பொருள்களில் நாட்டத்தை நீக்கினால் ஆத்மாவை அடைதலாகிற நிலையே மோக்ஷமாக இருக்கும் அதுவே வீடு.

வீடாமே : மோக்ஷத்தையடைய மற்றொன்றும் செய்ய வேண்டியதில்லை என திடமாகக் கூற, 'வீடாமே' என அறுதியிட்டுக் கூறுகிறார்.


**டாக்டர் பா. இராஜாராம் Ph.D.,**
**கோயம்புத்தூர்.**


எனவே 'உலக வாழ்வினின்றும் பல பிறப்பிறப்புக்களிலிருந்து விடுபட்டு அடைய வேண்டிய மோக்ஷம் என்பது ஆத்மாவை அறிந்து கொள்ள ஐம்புலக் கவர்ச்சிகளிலிருந்தும் நம்மை விடுவித்துக்கொண்டு, உலகப் பொருள்களின் மீது பற்றற்ற நிலையை அடைய வேண்டும். அந் நிலையே மோக்ஷமடைந்த நிலையாகும்' என்கிற விளக்கத்தை ஸ்ரீ நம்மாழ்வார் நமக்குத் தெளிவாக்குகிறார்.

ஆனால் நடப்பது என்ன?

"கடவுள் எங்கே? மோக்ஷம் எங்கே? கடவுள், மோக்ஷம் இருப்பது உண்மையானல், நமக்கு ஏன் தென்படவில்லை?" என்கிற கேள்விகளைப் பலர் கேட்டுக்கொண்டு தன்னையும் பிறரையும் வேதனைப்படுத்திக் கொண்டு திரிகிறார்கள். இது போன்ற கேள்விகளைக் கேட்கும்போது அவர்களைப் பார்த்து, "ஐயோ! பாவம்!" என அனுதாபப்படத் தோன்றுகின்

றது. ஏனென்றால், அவர்கள் கேள்விகளினால், தங்களது அறியாமையைத்தான் அவர்கள் பறைசாற்றிக் கொள்ளுகிறார்கள். எழுத்து வரிசை கூடத் தெரிந்து கொள்வதற்கு முயற்சி செய்யாமல், பல்கலைக் கழகத்தில் பட்டம் பெற முயற்சி செய்பவர்களுக்கும் இவர்களுக்கும் என்ன வித்தியாசம்?

கடவுளைக் காண வேண்டுமென இவர்கள் ஆசைப்படுகிறார்கள்; ஆனால் அதற்கு வேண்டிய வழி முறைகளை மேற்கொள்ளும் சிரமத்தைப் படத் தயாராக இல்லை. நன்னெறியின் பலமும் தூய்மையும் இல்லாதவர்கள் கடவுள் மற்றும் மோக்ஷ இன்பத்தை எப்படி அறிய முடியும்?

ஆன்மீகச் சாதனம், தெய்விக சாத்திரங்களை ஆதாரமாக உடையது. அவற்றை ஒரு நொடியில கற்றுத் தேர்ந்து விட முடியாது. அவற்றின் மெய்யுபதேசம் "திராவிட வேதமான" ஸ்ரீ நம்மாழ்வார் திருவாய் மொழியில் வடித்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது. "கடவுளே ஆழ்வாரின் உள்ளிருந்து கூறிய இரகசியங்களாகும்" என்பதை நம் குலக் கொழுந்தாகிய ஸ்ரீ நம்மாழ்வாரின கீழ்க்கணட பாடல் விளக்கும்.

"சொகண்டு கொண்டு திருந்து நல்
இன்கவி
நேர்பட யான் சொல்லும் நீர்மை
இலாமையில்
ஏாவு இலா என்னைத் தன் ஆக்கி
என்னால தன்னைப
பார்பரவு இன் கவி பாடும
பரமரே!"
7.9:5



---

(30-ம் பக்கத் தொடர்ச்சி)

மீண்டும் பிறந்தான் மனிதர் வாழாத காட்டிலே ஒரு செந்நாயாக; இளவரசியும் தன்னைக் கொணடவனைப் பேணி எப்படியாவது நற்கதியடையச் செய்ய அவனைப் பின் தொடர்ந்தாள்—முயற்சியில் தளர்ச்சியடையாதவளாக.

"நீங்கள் செந்நாயல்ல; சததனு மன்னனே யாவீர். உபவாச நாளில் தீயவனுடன் உரையாடியதன் விளைவால் நாயாகவும் நரியாகவும் பிறப்பெடுத்து இப்பொழுது செந்நாயாகப் பிறந்துள்ளீர். நான் உங்களது அன்பு மனைவி சயிபியை," என்று முற்பிறவிகளில் அவனுக்கு நடந்த சம்பவங்களை நினைவூட்டினாள்.

செந்நாய் உடலை நீத்த அரசன் ஒரு கழுகாகப் பிறந்தான். கீழான எண்ணங்களுக்குப் பலியாகாமல் உயர்ந்த எண்ணங்களிலே வட்டமிட்டுக்கொண்டிருந்த தன்னைக் கொண்டவனுகிய சததனு மன்னனுடைய உள்ளம் எங்கே? வானத்தில் அதிக உயரம் வட்டமிட்டாலும் தரையில் கிடக்கும் கீழான இறந்த பிராணிகளிடம் செலுத்தும் கழுகின் உள்ளம் எங்கே? உபவாச நாளில் தீயவனுடன் உரையாடல் நடத்தியதால் தன்னைக் கொண்டவனுக்கு ஏற்பட்ட பிறவிகளில் கொடுமைகளை நினைத்தாள். கழுகினிடம் சென்று அதனுடைய பிறவியை நினைவூட்டும் முயற்சியில் அவளது உள்ளம் சோர்வடையவில்லை. பிறவியை உணர்ந்த கழுகு இரை தேடாமல் பட்டினிக் கிடந்து இறந்தது. ஒரு காகமாகப் பிறந்தது.

எல்லா அரசர்களும் குற்றேவல் செய்து கப்பம் செலுத்தும்படி வாழ்ந்த தன் கணவன் இப்பொழுது பலி போஜனம் செய்யும் காகமாகவல்லவா பிறப்பெடுத்துள்ளார்? எத்தித் திருடும் அந்தக் காக்கையிடம் சென்று பிறப்பை உணர்த்த, உயிரைவிட்ட அந்தப் பிராணி தோற்றத்தில் தூய்மையாகவும் உள்ளத்தில் வஞ்சக எண்ணமும் கொண்டு வாழும் ஒரு கொக்காகப் பிறந்தது. பின் இளவரசியால் நினைவூட்டப் பெற்று மயிலாகப் பிறந்தது.

அந்த மயில் தன்னை முற்பிறவியில் கொண்டவன் என்று அதனைப் பேணினாள். காசி நாட்டிற்குக் கொண்டு வந்து தன் அரணமனையில் வளர்த்தாள். தன் தந்தை செய்த அசுவமேத யாகத்தின் அவபிரத தீர்த்தத்தில் நீராட்டினாள். தீர்த்தத்தின் பலன் அந்த மயிலுக்குக் கிட்டும் நேரம் நெருங்கிவிட்டது. அந்த இளவரசியும் மயிலுடன் நீராடினாள். பின் பூர்வ விருந்தாந்தங்களை ஒன்றும்கூட விடாமல் கூறினாள்.

தான் எடுத்த நாய், நரி, செந்நாய், கழுகு, காகம், கொக்கு, மயில் ஆகிய பிறப்புக்களைப் பற்றி எண்ணினான்— மயிலாக இருந்த மன்னன் சததனு. மிகுந்த கவலை கொண்டான். அந்தப் பிறவிகளுக்கேற்றத் தீய குணங்களை வாக்கு சாதுர்யத்தால் எடுத்துக் கூறித் தனது ஆத்மா விடுதலைக்குப் பாடுபட்டவள்—தான் முற்பிறவியில் கொண்ட மனைவி சயிபியை என்பதை உணர்ந்தான். மிகுந்த ஆனந்தம் கொண்டான். மானிடப் பிறவியினை அடைந்து மீண்டும் அவளையே மனைவியாகப் பெற வேண்டும் என்று திண்ணிய எண்ணமுடன் மயிலாக இருந்த மன்னன் உயிரை விட்டான்.

விட்டவன் விதேக நாட்டில் ஜனக மன்னனுடைய மகனாகப் பிறந்து நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தான். வளர்ந்து பருவ மெய்தியதை உணர்ந்த காசி நாட்டு இளவரசி, தன் தந்தையிடம் தன் திருமணத்திற்கு ஒப்புதல் அளித்தாள். சுயம்வரத்தில் முறபிறவியில் தன்னைக் கொணடவனுக்கே இப் பிறவியிலும் மாலையிட்டாள்.

தன்னைக் கொணடவனைப் பேணிய சயிபியை, விஷ்ணு புராணம் அறிமுகப்படுத்தும் மங்கையர்களுள் ஒரு நாயகமாக, மங்கையர்த் திலகமாக விளங்குகிறாள் என்று கூறினால் அது மிகையாகாது.



# அழியா அழகு

திரு. இரா. மணவாளதாசன்.
நங்கநல்லூர்.

ஒரு பொருளைக் கண்ட மாத்திரத்திலே, உள்ளத்தில் உண்டாகும் இன்ப நெகிழ்ச்சியே "அழகு" என்று கூறுவர் பெரியோர். அகத்திலே உண்டாகும் அழகு, புறத்திலே தோன்றக் கூடிய அழகு, இயற்கையழகு எனப் பல வகைகளில் பார்க்கலாம் இந்த அழகை. இவை எல்லாவற்றிற்கும் மேலாக எண்ணின் மூலமும், எழுத்தின் மூலமும் ஏற்படுகின்ற அழகே உண்மையான அழகு என்கிறார் ஏலாதி ஆசிரியர். அழகு என்ற சொல்லுக்குச் 'சிறப்பு' என்றும் 'வனப்பு' என்றும் பொருள். உடற்புற அழகுகள் என்று சொல்லக்கூடிய இடை, தோள், கழுத்து, கன்னம் போன்ற உறுப்புகளின் வனப்புகள் வனப்பென்று கூறப்படுவன அன்று. எண்ணும், எழுத்துமே அழகென்று கூறத்தக்கன என்னும் கருத்துப் புலப்பட,

" இடை வனப்பும் தோள் வனப்பும்
ஈடின் வனப்பும்
நடை வனப்பும் நாணின் வனப்பும்
— புடைசால்
கழுத்தின் வனப்பும் வனப்பல்ல
எண்ணோடு
எழுத்தின் வனப்பே வனப்பு "

என்கிறார் கணி மேதாவியார். இப்படி எண்ணையும், எழுத்தையும் கண்ணெனக் கொண்டு, அந்த அழகிலே ஊறித்திளைத்து ஆனந்தம் அடைகின்றவர்கள் மிகச் சிலரே.

அழகென்று சொல்லத் தகுந்த அனைத்திற்கும் மேலாக விளங்குவது கசடறக் கற்று அறிந்து, அதன்படி நடக்க வைக்கும் கல்வி ஒன்றே. அதனாலேதான் அதிவீர ராம பாண்டியர் தனது வெற்றி வேற்கையிலே,

"எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்"
"கல்விக்கழகு கசடற மொழிதல "

என்று எழுத்தை அறிவித்த இறைவனைப் பாடி, அதற்குக் காரணமான கல்வியின் அழகை முதலில் காட்டுகிறார்.

இந்த எழுத்து வனப்பினை ஏற்றத்தினைச் கவிச்சக்ரவர்த்தி கம்பரின் ஒவ்வொரு பாடல்களிலும் பார்க்கலாம்; ஆழ்ந்த சிந்தனையைத் தூண்டிச் சொல்லோவியத்தினால் மனதைச் சொக்க வைத்திடும் சீரிய கருத்துச் செறிவினைக் கொண்ட அப்பாடல்களைக் கேட்போர்க்குப் புற அழகெல்லாம் அற்றுப்போய் இதுவன்றோ அழகென்று அறையத்தக்க அளவிற்கு சிறப்பு பொருந்தியது. அது மட்டுமல்ல. அழகைப் பற்றிச் சொல்லிய கவிஞர்கள் வரிசையில் முதலிடம் பெறுபவரும் அக்கம்பரே. கற்றோர்க்கு இதயம் களிக்கக்கூடிய கவிதைகளை அளித்ததும் அக்கவிச் சக்ரவர்த்தி ஒருவரே.

அயோத்தி மாநகரின் அழகினை அகக்கண்கொண்டு காண்கின்றார் கம்பர். இதுவோ? அதுவோ! என்று எண்ணி, எண்ணி இன்புற்று, உவமை கண்டிலா நிலையை எய்தும் அக்கவிஞரின் பாடல் அழகுக்கு நம்மால் ஒப்புமை கூற ஒண்ணுமோ?

" நிலமகள் முகமோ? திலகமோ?
கண்ணோ!
நிறைநெடு மங்கல நாணோ?
இலகு பூண் முலைமேல் ஆரமோ?
உயிரின்
இருக்கையோ? திருமகட்கு இனிய
மலர் கொலோ? மாயேன் மார்பின்
நன்மணிகள்
வைத்தபொற்பெட்டியோ! வானோர்
உலகின் மேல உலகோ! ஊழியின்
இறுதி
உறையுளோ? யாதென
உரைப்பாம்"

உலகை ஒரு பெண்ணாகக் கற்பனை செய்து, அவளுக்கு நிலமகள் என்கிற பெயரை வைத்து, பூமியனைத்தும் நிறைந்துள்ள அவள் திருமேனிக்கு முகமாக விளங்குவது அயோத்தி என்னும் பொருளைக் கூற "நிலமகள் முகமோ" என்றார். முகத்திற்கு தெய்வ வடிவு கொடுப்பது நெற்றித்திலகம்! மங்கையர்க்குத் திலகமே மங்காத செல்வம். எனவே "திலகமோ" என்றார். பிறகு ஒளியை உண்டாக்குவது கண்ணுதலின் "கணணோ" என்றார். இவை அனைத்தையும் விட, பெண்ணிற்குப் பிறவிப்பயன் தந்து பெருமை சேர்க்கும் "மங்கல நாணோ" என்றார். ஸ்ரீமகாவிஷ்ணுவின் திருமார்பு ஆபரணங்களை எடுத்து அடுக்கி வைத்த "பொற்பெட்டியோ! வான உலகத்தின் மேல் உலகமோ! ஊழிக் காலத்தின் இறுதி உறையுளாக விளங்கக் கூடிய இடமோ! யாதென்று உரைப்பது?" என்று உரைக்க ஒண்ணாப் பேரழகை உடையப் பெருநகரின் திருஎழிலைச் செப்பிப்போகும் பாங்கு அவர் பாட்டழகைப் பகர்கிறது.

சீதையைப் பெண் பார்க்கும் பொருட்டு வசிட்டன் சீதையை அழைத்து வரச் சொல்ல, தாதியர் சீதைக்கு அழகு செய்யும் காட்சியைச் சித்தரிக்கிறார் கம்பர். இயற்கையாகச் சுவையுடைத்ததாய் இருக்கும் அமிழ்தினுக்கு மேலும் சுவை சேர்த்தாற்போல அழகினுக்கு மேலும் அழகு செய்தார்களாம்.

" அமிழ்தினைச சுவை செய்தன்ன
அழகினுக்கு அழகு செய்தார் "

என்பன அப்பொன் வரிகள். இது மட்டுமல்ல. ஒரு பெண்ணினுடைய அழகினைக் கண்ட மற்றொரு பெண், "இவள் அழகுடன் இருக்கிறாள்" என்று கூறுவது மிக அரிது. ஆனால சீதாதேவியைக் கண்ட சூர்ப்பணகை "இவளுடைய அழகினுக்கு எல்லையே இல்லை; இவளைக் கண்ட கணகள் பிற பொருளில் செல்லாது. கருத்தும் அவ்வாறே; பெண்ணாகப் பிறந்த எனக்கே வியப்பாக உள்ளதே! பிற ருக்கு என் செய்யும்" என்று சொல் லும்படி அமைநதுள்ளது அநத அழ குப் பாடல்.

பண்பு உற நெடிது நோக்கி,
"படைக்குநர் சிறுமை அல்லால
எண் பிறங்கு அழகிற்கு எல்லை
இல்லை ஆம்" எனறு நின்றாள்;
"கண்பிற பொருளில் செலலா;
கருத்து எனின, அஃதே, கணட
பெண்பிறந்தேனுக்கு என்றால்
என்படும் பிறாக்கு?" என்றாள்.

இப்படி அழகினைப்பற்றிச் சொல் லும் கம்பரின் பாடல்களுக்குத்தான் எத்தனை சிறப்பு? எத்தனை வனப்பு? ஆனால், கம்பரின் கண்களுக்கு அழியா அழகாகத் தெரிந்தது அநத இராம பிரானின் திருமேனி ஒன்றே! ஐயோ! என்று அறைநது ஸ்ரீராமன் மேனி வடிவைக்கண்டு; மெய் சிலிர்த்து உவ மை கூற இயலாத நிலையை அடை கின்றார் கம்பர்.

'சொல்லின் செல்வன' என்று சொல்லக் கூடிய வாயுபுத்ரன் அனு மானாலேயே ஸ்ரீராமசந்திரமூர்த்தி யின் பேரழகை வாணிக்க முடிய வில்லை. சுந்தர காணடத்திலே சீதாப் பிராட்டியைக் கணடு, கைதொழுது "அண்டர் நாயகனின் அருள் தூதன்" என்று தன்னை அறிமுகம் செய்து கொண்ட பினபு ஸ்ரீராமபிரானின் திருமேனி எழிலை சீதாப்பிராட்டிக் குச் சொன்னபோது,

"அணணல் தன்முகம் அது கமலம்
ஆம் எனில
கண்ணினுக்கு உவமை வேறு
யாது காட்டுகேன"

என்று உவமை தரமுடியா அச்சொல் லின் செல்வனைபேராசிரியர் வை. மு. கோ. அவர்கள் "சொல்லின் செல் வன் அனுமானின் தோல்வி" என்றே இந்த இடத்தில தனது உரையில் குறிப்பிட்டுள்ளார். கம்பரும் தன்னை ஒரு கணம் மறந்து ஐயோ! என்று விளிதது ஸ்ரீராமன் திருவெழிலில் மயங்கி மலைககிறார்.

இராமபிரான "பொய்யோ" என்று புகலககூடிய இடைகொண்ட சீதா பிராட்டியோடும், இளையவன் இலக் குவனோடும கானகம் புகுகின்றாகள். அபபடிப் புகும் தருணத்தில் இராமபிரானின மேனி ஒளிககு எதிர் நிற்க முடியாதவனாய். கதிரவன் தன்னை மேகத்தினூடே ஒளித்துக கொள்கிறான். ஒளி உமிழ் சூரியனே ஒளித்துக கொள்ளும்மேனி ஒளியைக் கொணட இராமபிரான் மைக்கு உவ மையோ? என்று நினைதத கம்பர் "மையோ?" எனறார். மையானது சிமிழுக்குள் அடங்கும். ஆனால் ராம பிரான எங்கும் நிறைந்த பரம் பொருள். அவனை சிமிழுக்குள் அடக்க முடியாது. எனவே மையோ? என்று நினைத்த கம்பா அதுவல்ல என்று தெளிநது "மரகதமோ?" என் றார். மரகதம் ஒளி மிக்கது. ஆனால அது கல். பணம் படைத்தவர்களுக் குத் தான அது சொநதம. இராமன் ஒளி மிக்கவன். ஆனால அவன மன்ம் கல அல்ல, அவன் ஏழைப்பங்காளன். எனவே மரகதமோ? என்றவன அது வல்ல என்று அறிந்த "மறிகடலோ" என்றார். கடல் உலகெங்கும் பரந்து விரிந்துள்ளது. இராமனும் அவ்வா றே. ஆனால் உவர்ப்பு நீரைக்கொணட அது குடிக்கப்பயன்படாது. அது மட்டுமன்றிக் கடலை நாம் சென்று தான் பார்க்கவேண்டும். அது நம்மை நாடி வந்தால் ஆபத்து; இராமன அப்படியல்ல, நம்மைத் தேடி வநது நம்மை விளைப்பவன், இனிக்கும் கற் கண்டு சுவை கொண்டவன். அதனால் மறிகடலோ? எனற கம்பர், மனம் மாறி "மழை முகிலோ?" என்றார். கைமாறு கருதாமல் உதவி செய்யும் குணம் மழை ஒன்றுக்குத்தான உண்டு. இறைவனான இராமனும் அவ்வாறே.ஆனால் வேணடும் போது மழை பொழியாது! நாம் வேண்டாத போது பொழியும! ஆனால் இராம பிரான வேண்டும்போது வரும் அனாத ரட்சகன். எனவே அந்த உவமையும் கம்பருக்குத் திருப்தியளிக்காது போக வே ஐயோ! என்று அலறி "இவன வடிவை என்னவென்று சொல்வது? அழியா அழகனல்லவோ இவன்" தனக்குள்ளே ஆனந்தம் அடைகின் றா.

"வெய்யோன் ஒளி தன் மேனியின்
விரிசோதியின் மறைய,
பொயயோ எனும இடையாளொடும்
இளையானொடும் போனான்;
மையோ? மரகதமோ? மறிகடலோ?
மழைமுகிலோ?
ஐயோ! இவன் வடிவென்பதொர்
அழியா அழகு உடையான்"

எனறு அழியா அழகுடைய ஸ்ரீராமச் சந்திரமூர்த்தியைப் பாடிய அக்கம்ப ரின் பாடல்களில் காணப்படும் கருத் துக்கள், நயங்கள், கற்பனைகள் ஆகிய அனைத்துமே "அழியா அழகு" பெற் றவை எனறு கூறுவது மிகையாகாது.



# பக்திப் பாடலில் வாழ்வியல்

கவிதையோ, காவியமோ மனித வாழ்வுககு வழிகாட்டியாக விளங்க வேண்டும். அவ்வாறு ஆகாத பாடல்கள் காலநதி ஓட்டத்தில் ஒதுக்கப்பட்டு விடும். நல்வழி காட்டாத காவியம கவனிப்பாரற்று ஓரம் சேர்ந்து விடும்.

தமிழ்க் கவிதை உலகம், இறந்த கால அனுபவங்களைத் தேக்கிவைத்து, நிகழ்கால நெஞ்சங்களுக்கு விருந்தாகி, எதிர்காலத் தலைமுறைக்கு மருந்தாகி வரும் தனமை கொண்டது. சங்கப் பாடல்களாக இருந்தாலும், காப்பியங்களாக மிளிர்ந்தாலும், சிற்றிலக்கியங்களாகச் சிறந்தாலும், தனிப்பாடல்களாகச் சிறந்தாலும் வாழ்வியலோடு பிணையாதப் பாடல்களை புலவர்கள் பாடவில்லை.

வாழ்க்கையின் கூறுபாடுகளைச் சுவைத்து, திட்ப நுட்பங்களை அலசிப் பார்தது, இதயப் பதிவேட்டின் வெளிப்பாடாக உருவான அவ்வகைப் பாடல்களில் நகைச்சுவை மின்னும், கமபீரம் துள்ளும், சொல்லோசை நடனமிடும். இத்தனைக்கும் மேலாக வாழ்க்கை வழிமுறைக்கு ஒரு பாடத்தை வழங்கும்.

காலமறிந்தே தாரியம்செய்யவேண்டும் என்பது வாழ்வியலின் விதி.

'' ஞாலம் கருதினும் கைகூடும் காலம
கருதி இடத்தாற் செயின் ''

எனபார் வள்ளுவப் பெருந்தகை. உரிய நேரமறிந்து, உள்ள இடத்தையும் நோக்கி ஒரு செயலைப் புரிந்தால் அச்செயலால் இவ்வுலகத்தையே பெற நினைத்தாலும் நடக்கும் என்பதுதான் வாழ்க்கை வகுத்துத்தரும் தத்துவம்.

வரலாற்று நாயகர்களின் வாழ்க வெற்றியை நிர்ணயம் செய்வதே இநத வரிச்சட்டம்தான். நம வாழ்க்கையிலும் இதனைத்தான் ஒவ்வொரு நேரத்திலும் அனுபவப்பட்டுக்கொண்டிருக்கின்றோம். காரியம் நல்லதாகவே இருக்கும். ஆனல் கைகூடாமல் போவது காலம் காட்டாத கருணையால்தான். இந்த தத்துவத்தை ஓ அடியார் வழியில் நமக்குக் காட்டுகின்றார் புலவர் ஒருவர்.

திருநெல்வேலியில காநதிமதி அமமைத் திருக்கோவில் கம்பீரமாகக் காட்சி கொடுககிறது. அங்கே உலகைக் காத்தளிக்கும் அம்மையின் திருமுன்பு அடியார் ஒருவர் பகதிப் பரவசத்தோடு நிற்கின்றார். வடிவாம் பாளின் திருமுகப் பொலிவு அடியாரின் உள்ளத்தை ஈர்க்கிறது. தாயாரின் பெருங்கருணை, தனக்குக் கிடைக்கவில்லையே என்கிற ஏக்கம் அவருக்கு இருக்கிறது. அந்த ஏக்கத்தால் 'நெல்வேலி வடிவன்னையே!' என்று உரிமையோடு அழைத்தார். தாயாரின் அருட்பார்வை அவருக்குக்கிட்டிவிட்டது. நேருக்கு நேர் நின்று உரிமையுடன் பேசுவது போலத் தொடங்குகின்றா. 'அம்மா! உன் வாயில் எனன முத்தா? வாய் திறந்து பேசிவிட்டால் அந்த முத்துக்கள் சிந்தியா போகும்? தங்கள் துணைவரிடம் என்னைப் பற்றிச சொல்லக் கூடாதா?' என்று வரிசையாகக் கேள்விகளைக் கேட்கத் தொடங்கி விட்டார்.

'' வேய்முத்த ரோடென் வினைக
ளெல்லாம் மெல்லச்சொன்னல
வாய்முத்தம் சிந்திவிடுமா நெய்வேலி
வடிவன்னையே! ''

என்று கேட்டார். இத்தோடு விட்டாரா? இல்லை இன்னும் கேட்கின்றார்.

'அம்மா! இறைவரிடம் என்னைப் பற்றிச் சொல்வீர்கள் என்கிற நம்பிக்கை எனக்கு இருககிறது. எந்தநேரம் சொல்ல வேணடும் என்பது உங்களுக்குத் தெரியாததா?

நெல்லையப்பரும் நீங்களும் நெடுநிலா முற்றத்தில முத்துப் பந்தலின் கீழ், பஞ்சணை மீதமர்ந்தபடி இருக்கும் நேரம் ஒன்று உணடே, அந்த வேளையிலும் கூட, இறைவா எமக்கொரு முததம்தா, முத்தம்தா என்று கெஞ்சுவாரே, அந்த சமயம்பார்த்து எளியேனைப்பற்றி ஒரு வார்த்தை சொல்லக் கூடாதா? அப்படிச்சொன்னல் உங்கள் வாய் முத்தம் சிந்தியா விடுமா?' என்று கேட்கின்றார். கவிஞர் எநத அளவுக்கு வாக்கு சாதுர்யத்தை இந்த வேணடுதலில் வைக்கின்றார் என்பதை எணணிப் பார்த்து மகிழவேண்டும்.

புலவ. பெ. வேலு, எம். ஏ. பி. எட்,
தாரமங்கலம்.

இன்றைக்கும் ஒரு காரியம ஆக வேண்டும் என்றல், 'அம்மாவின் கருணை பெற்று' நிறைவேற்றிக் கொள்ளும் திறமைசாலிகளைக் காண்கினறோம். நேரமறிந்து செயல் புரிய வேண்டும் என்பதனைப் பக்தி மார்க்த்தில் சொல்லிககாட்டிய பாவலரின் ஆற்றலைப் போற்றுவதா? அற்புதமான இப்பாடலின் நயத்ததில் நம் நெஞ்சை நடை போட வைப்பதா? என்று தடுமாறும் இந்த வேளையில்,

'' ஆய்முததப பந்தரில மெல்லணை
மேலிருந்து
நீ முத்தநதா என்று அவா
கொஞ்சும் வேளையில்
வேய்முத்தரோடென் வினைக
ளெலலாம் மெல்லச சொன்னல்
வாய்முத்தம் சிந்திவிடுமா
நெல்வேலி வடிவன்னையே! ''

என்னும் பாடலைப் பாடி, கவிதை தந்த பெருமானை அழகிய சொக்கநாதரையும் போற்றுவோமாக?

## திருமலை திருப்பதி தேவஸ்தானம்

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான திட்டம்

இவ்வுலகில் ஏழைகளுக்கு உணவு இடுதலைவிட வேறு எந்தவிதமான தர்மமும் சிறந்தது இல்லை. அதிலும திருவேங்கடவன் குடி கொண்டிருககும் திருமலையில் யாத்திரிகளுக்கு இலவசமாக உணவு வழங்குதல் மிகவும் அருளுடையது. இவ்வகையில தி.தி. தேவஸ்தானம், திருமலைக்கு வரும் பகதர்களுக்கு இலவசமாக "முழுச் சாப்பாடு" அளிக்கும் வகையில் "ஸ்ரீ வேங்கடேஸவரா நித்ய அன்னதான திட்டம" ஒன்றினை செயற்படுத்தியுள்ளது.

## திட்டம் எப்படி வேலை செய்கிறது

* தேவஸ்தானத்திற்கு ரூ. 10 இலட்சம் அல்லது அதுபோன்று பல மடங்கு நன்கொடை அளிக்கவேண்டும். தி.தி.தே. அத்தொகைக்கு ஈடான தன் பங்கினை செலுத்தும். மொத்தத்தொகைக்கு வரும் வட்டித் தொகையிலிருந்து நாள்தோறும் 400 யாத்திரிகர்களுககு உணவு வழங்கப்படும்.

* நன்கொடைகள் யாவுமதனிமனிதர்கள், சிறு கழகங்கள், தனியார் நிறுவனங்கள் ஆகியோரிடமிருந்து பெறப்படும்.

* உணவு அருநதும் கூடத்தில் நன்கொடையாளாகளின பெயர் முக்கிய இடத்தில் வைக்கப்படும்.

## பயன்களும் உதவிகளும்

* வருடத்தில் மூன்று நாட்களின்போது திருமலையில் நனகொடையாளர் தன் குடும்பத்தாருடன் இலவசமாகத் தங்கவும், மேலும் அவர்களுக்கு ஹாரத்தியுடன் இலவச தரிசன வசதியும் செய்து தரப்படும்.

* எண் 80 (ஜி) பிரிவின்கீழ் நன்கொடையாளர்கள் வருமான வரிவிலக்குப் பெறுவார்கள்.

* நாள்தோறும் நடைபெறும் இறைவனின் கொலுவு சேவையின்போது நன்கொடையாளரின் பெயரும் கோத்ரமும் வாசிக்கப்படும்.

* இத்திட்டப்பணியினை மேற்பார்வையிடும்வகையில், ஆலோசனைக்குழுவின் உறுப்பினர்களாக நன்கொடையாளர்கள் சேர்க்கப்படுவர்.

இதுவரை கீழ்வரும் நபர்கள் இததிட்டத்திற்கு நன்கொடை அளித்துள்ளனர்.

1. திரு. எல். வி. ராமய்யா - சென்னை. ரூ. 10 இலட்சம
2. திரு. மன்சிங்கா - பம்பாய். ரூ. 20 இலட்சம்
3. திரு. ஆர். பி. கோயங்கா - கல்கத்தா ரூ. 10 இலட்சம்
4. திரு. ஈஸ்வர் பிரஸாத் பொத்தார் - கலகததா. ரூ. 10 இலடசம்
5. திரு. நாட்டுபையா அம்பானி - ரிலையனஸ் டெகஸடைல் இண்டஸ்ட்ரீஸ் - பமபாய ரூ. 10 இலட்சம்
6. திரு. பி. எம். கைதான் — கல்கததா — ரூ. 10 இலட்சம்.
7. திரு. ஜலான் — கல்கத்தா — ரூ. 10 இலடசம்.
8. திரு. எம். ஆர். சாபரியா அற நிறுவனம எண் 1 — பம்பாய் — ரூ. 10 இலட்சம்.
9. திரு. ராம்நாத் கோயங்கா — சேர்மேன, இநதியன் எக்ஸபிரஸ் பததிரிகைக குழு — ரூ. 10 இலட்சம்.

மேலும் பல பக்தர்கள் பயன் பெற தாராளமாக உதவுங்கள்.

மேலும் முழு விவரங்களுக்கு :

செயலாட்சித்தலைவர், தி. தி. தேவஸதானம், திருப்பதி - 517501. ஆந்திர மாநிலம்.

**செயலாட்சித்தலைவர்.**

# கீதை காட்டும் நல்வழி

பகுதி — 14

மோக்ஷ ஸன்யாஸ யோகம

அத்தியாயம் — 18

யதக்ரே சானுபந்தே ச
ஸுகம் மோஹனமாத்மன. |
நித்ராலஸ்ய ப்ரமாதோத்தம்
தததாமஸமுதாஹ்ருதம் || (18-39)

"தொடக்கத்திலும், முடிவிலும் தன்னை மயக்குவதும், உறக்கம், சோம்பல் மற்றும் தடுமாற்றத்தினின்று பிறப்பதுமாகிய சுகம் தாமஸமெனப் பகரப்படுகிறது."

எந்த விதத்திலாவது சுகத்தை அடைய வேண்டும் என்ற நோக்கத்துடன் புலன்களுக்கு அடிமைப்பட்டவன தகாத வழிகளை நாடுகிறான். போதை மருந்துகளை உட்கொள்ளல், மது அருந்துதல் போன்றவற்றை உதாரணமாக எடுத்துக் கொள்ளலாம்.

"முதலில் மனிதன் மதுவை அருந்துகிறான்
இடையில் மது மதுவை அருந்துகிறது
இறுதியில் மனிதனை மது அருந்தி விடுகிறது"

என்ற ஒரு பழமொழியை ஈண்டு நாம் நினைவுகூற வேண்டும். மதுவை அருந்த ஆரம்பித்தவுடனேயே அது ஒருவனுக்கு மயக்கத்தை உண்டு பண்ணுகிறது. பின்னர் அதிகம் மது உள்ளே செல்லச் செல்ல மயக்கமும் தடுமாற்றமும் அதிகரிக்கின்றன. கள் உள்ளே செல்லுமளவு விவேகம் வெளியேறி விடுகிறது. தகாத வார்த்தைகளைக் குடிகாரன் பேசுகிறான். சாலையும், சாக்கடையும், வீடும் அவனுக்கு ஒன்றாகக் காட்சி தெரிகின்றன. குடிபோதையில் வாய்க்கு வந்தபடி உளறி, தத்தித் தடுமாறி மடாலென்று சாக்கடைக்கருகிலோ அல்லது நடு ரோட்டிலோ அவன் பொத்தென்று விழுகிறான். அவ்விதம் விழுந்தவனது உடைகளும் அலங்கோலமாகி விடுகின்றன. சாரி சாரியாக மக்கள் அவ்வழியே சென்றாலும் அவனை எவரும் தீண்டுவதாகக் காணோம். போதை தெளிந்து எழுந்த பின்னர் தன்னிலை அறிந்து அவன் மிகுந்த வருத்தத்திற்குள்ளாகிறான். உடலும் மனமும் மிகவும் கனக்கின்றன. அவன் சோம்பலுக்கு இலக்காகி காட்சி தருகிறான். இந்த விதமாக ஆரம்பத்திலும் இடையிலும் இறுதியிலும் தமோகுணச் செயலானது துன்பத்தையே தருகிறது. இடையிலே மின்னலைப் போல இன்பம் தோன்றி மறைந்தது. எலும்பைக் கடித்துச் சுவைக்க முற்படும் நாயின் வாயிலிருந்து ரத்தம் சொட்டல், முள் செடியை விருப்பத்துடன் தின்னும் ஒட்டகத்தின் வாயிலிருந்து சொட்டலைப் போன்றதற்கு நிகராகும். தமோ குணம் படைத்த கீழோர் தாங்கள் அடையும் துன்பத்தையே இன்பம் என எண்ணிச் சீரழிந்து போகின்றனர்.

இத்தகைய முக்குணங்களிலிருந்து விடுபட்டவர் எவராவது உண்டா என்ற கேள்விக்குப் பதில் அடுத்த சுலோகத்தில் வருகிறது.

ந தததஸ்தி பருதிவ்யாம் வா
திவி தேவேஷு வா புன: |
ஸத்வம் ப்ரகிருதிஜைர்முக்தம
யதேபி: ஸ்யாத் த்ரிபிர்குணை: ||
(18-40)

'இயற்கையிலிருந்து தோன்றிய இம் முக்குணங்களிலிருந்து விடுதலை அடைந்த உயிர் மண்ணுலகிலோ அல்லது விண்ணுலகில் தேவர்களுக்கிடையிலோ இல்லை'.

நீரின்றிக் கடலை கற்பனை செய்ய முடியுமா?

கல்லின்றி மலை இருக்க முடியுமா?

எலும்பும், ரத்தமுமின்றி மனிதன் இருக்க முடியுமா?

முடியாது. அதுபோல முக்குணங்களுக்கு வசப்படாத உயிரை மண்ணுலகிலும் காணமுடியாது, விண்ணுலகிலும்காண முடியாது. உயர்திணை மட்டுமின்றி அஃறிணைப் பொருட்களும் கூட இந்த முக்குணங்கள் மயமாகவே உள்ளன. பாபம் செய்தால் கீழுலகம், புண்ணியம் செய்தால் மேலுலகம் என்று சொல்லுகிறோமில்லையா? எந்த உலகம் போனாலும் இந்த முக்குணங்களில் பிடியில் இருக்கும் வரையில் பிறப்பும் இறப்பும் மாறி மாறி வந்து கொண்டுதான் இருக்கும். குண வேறுபாட்டிற்கு ஏற்ப உயிர்களின் பிறவி மாறி அமைகிறது. ஜீவர்களில் மிகப் பெரிய ஸ்தானத்தை வகிப்பவர் பிரம்மா. அதுவும் ஒரு பதவியேயாகையால் முக்குணங்களின் ஆளுகைக்கு உட்பட்டதாகும். ஒரு கல்பத்தின் முடிவில் பிரம்மா கிரமமுக்தி அடைகிறார். அதற்கு மேல் உயர்வான பிறப்பு கிடையாது.

மோட்சம் என்பது வேறு. அதற்கான மார்க்கம் இனி வரும் சுலோகத்தில் கூறப்படுகிறது.

பேராசிரியர் டி. கே. நாராயணன்
M.S.c., M.Phil.
ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.

## வைணவ பரிபாஷை

தாள பத்ரம - பனை ஓலை.

தாள் - திருவடி, பூட்டு.

ததீயாராதனம் - ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஸமாராதனம்.

தமக்கை - அக்கா.

தாயார், பிராட்டி, தேவி - ஸ்ரீ மஹாலக்ஷ்மீ

திருபுட்கூடை - ஓலையில் ஆன பெட்டி.

திருமண்காப்பு, ஊர்த்வபுண்ட்ரம - ஸ்ரீ வைஷ்ணவர் என்பதைக் குறிக்கும் சின்னமான திருமண்.

திருமண்பெட்டி - திருமண, ஸ்ரீ சூர்ணம் உள்ள பெட்டி.

திருவாராதனம - பூஜை செய்தல்.

பெருமாள் - பகவான் விக்ரஹம், ஸாளகிராமம்.

திருக்காவேரி - பூஜைக்காக தீர்த்தம் வைக்கும் விளிம்புள்ள குடம்.

ப்ராஹ்மண க்ஷத்திரியவிசாம்
சூத்ராணாம் ச பரந்தப |
கர்மாணி ப்ரவிபகதானி
ஸ்வபாவ ப்ரபவைர்குணை: ‖
(18-41)

'எதிரிகளை எரிப்பவனே? பிராம்மண, க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களுடைய கர்மங்கள், அவரவர் ஸ்வ பாவத்தில் உதித்த குணங்களுக்கு ஏற்பப் பிரிக்கப்பட்டுள்ளன'.

ஸ்வபாவம் அல்லது இயல்பு முக்குணமாயுள்ளது. அதை எளிதில் புரிந்து கொள்ள முடியாது. ஒருவன் செய்யும் கர்மம் அல்லது செயல், அவனது ஸ்வபாவம் அல்லது குணத்தைப் பொறுத்தே அமைகிறது. கர்மத்தின் விளைவாகப் பெறப்படுகின்ற சமஸ்காரத்திற்கு ஏற்ப ஸ்வபாவம் மாறுகிறது. இந்த விதத்தில் கர்மமும், ஸவபாவமும் இணை பிரியாதவைகளாக அமைகின்றன.

பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்ர என்னும் நான்கு ஜாதி அல்லது வர்ணங்களை குணம், கர்மத்திற்கேற்ப தாமே சிருஷ்டித்ததாகப் பகவான் முன்பேயே கூறியிருக்கிறார். அதையே, இந்த சுலோகத்தில் மீண்டும் கூறுகிறார். ஜாதிமுறை ஒவ்வாதது. அது ஒழிந்தால்தான் அல்லது ஒழிககப்பட்டால்தான் இநதியாவிற்கு நற்கதி உணடு என்று வாதிடுபவர்கள் உண்டு. ஆனால் நன்றாகச் சிநதிக்குமிடத்து உலகில் ஜாதி பேதம் இல்லாத இடமே கிடையாது எனலாம். 'ஜாதி' என்பது இனம் அல்லது பிரிவைக் குறிக்கும். மாம்பழத்தில் எத்தனை ஜாதி? அதன் ருசியைப் பொறுத்து. மரத்தில் எத்தனை ஜாதி? அதன் தரத்தை பொறுத்து! இவ்விதம் ஒவ்வொரு பொருளாக ஆராய்ந்து கொண்டு போனால் ஜாதி அல்லது வர்ண வேறுபாடு இல்லாத பொருளையோ, மனித சமுதாயத்தையோ நாம் காண முடியாது. உடலில் அவயவ பேதம், பாலில் ஆண்பால், பெண்பால் பேதம், வயதில் குழந்தை இளைஞன், கிழவன் பேதம் உண்டு. இது போல் குணம், செயல் இவற்றின் அடிப்படையில் மனித சமூகத்தை நான்கு ஜாதியாகப் பகவான் பிரித்திருக்கிறார். இந்தப் பிரிவு பாரதத்தில் மட்டுமல்லாது அமெரிக்கா, ரஷியா, சீனா போன்ற எல்லா நாடுகளிலும் உண்டு. ஆனால் வேலையில் உயர்வு தாழ்வு பாராட்டுதல் கூடாது. மேனாடுகளில் அவ்விதம் வேறுபாடு பாராட்டுவதில்லை. துரதிருஷ்டவசமாக நம நாட்டில் அநத வேறுபாடு பாராட்டப்படுகிறதை நாம் காண்கிறோம். அதன் காரணமாகவே பாரதம் இந்த இழி நிலையில் காணப்படுகிறது. ஜாதிகளின் காரணமாக அல்ல. தலைவலிக்கு மருந்து தலையை வெட்டுவது அல்ல, வலி ஏன் ஏற்பட்டது என அறிந்து அந்தக் கோளாறைப் போக்குவதேயாகும்.

ஒவ்வொரு வர்ணத்திற்குரிய கர்மம் எவ்விதம் பிரிக்கப்பட்டிருககிறது என்பது இனிவரும் சுலோகங்களில் விளக்கப்படுகிறது. முதலில் பிராம்மண வர்ணத்திற்குரிய கர்மங்கள் விளக்கப்படுகின்றன.

சமோ தமஸ்தப: சௌசம்
க்ஷாந்திரார்ஜவமேவ ச |
ஞானம் விஞ்ஞான மாஸ்திகயம
ப்ரம்ம கர்ம ஸவபாவஜம்‖ (18-42)

'அகக்கரணங்களை அடக்குதல், புறக்கரணங்களை அடக்குதல், தவம், தூய்மை, பொறுமை, நேர்மை, சாஸ்திர ஞானம், சுவானுபவ ஞானம, இறை நம்பிக்கை—இவை யாவும் இயல்பாயுண்டான பிராம்மண கர்மங்களாகும்.'

குறளுக்கும் கீதைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. பல இடங்களில் கீதையில் பகவானுடைய கூற்றும், குறளில் வள்ளுவரின் வாக்கும் கிட்டத்தட்ட மொழி பெயர்ப்புகள போலவே தோன்றும். அறவழி நிற்பவன் பிராம்மணன் என்பது பகவானின் கூற்று. இதையே வள்ளுவர் 'அந்தணர் என்போர் அறவோர்' என்று கூறுகிறா. பிறப்பால் பிராம்மணன் ஆகிறான் என்பது உலகாயதர்களின் கருத்து. ஆனால் மனபரிபாகம் மற்றும் வாழ்க்கை முறையை ஒட்டி எவனும் பிராம்மணனாகலாம் என்பது கீதையின் கருத்து.

(தொடரும்)

# எங்குப் போய் உய்கேன்!

அது ஒரு சிறிய துறைமுகம். அங்குக் கொஞ்ச நேரமே சிறுசிறு கப்பல்கள் வந்து, தங்கிப் பயணிகளையும் சரக்குகளையும் ஏற்றி இறக்கிப் பின் தன் கடற்பயணத்திலே கடலைக் கிழித்தபடி வேகமாகப் போகும்.

அத்துறைமுகத்திலே கப்பல் நங்கூரம் பாய்ச்சி அப்படி நின்று கொண்டிருந்த ஒரு நாளில், மரத்தின மீது சிறிது நேரம் தஙகி, மேலே பறந்து கடலின மீது தாவி, மேலே துள்ளும் மீன்களைத் தன் அலகால் கௌவித் தின்னும் பறவை ஒன்று, அந்தக் கப்பல் கூம்பின் மீது ஏறி அமர்ந்தது.

சிறிது நேரத்திலே கப்பல் தன் கடற் பயணத்தைத் தொடர்ந்தது. வேகவேகமாக அது நடுக்கடலிலே போய்க் கொண்டிருந்தது.

கூம்பின் மேல் அமர்ந்திருந்த பறவையின் கணகளுக்கு எப்பக்கமும் தண்ணீர் தவிர வேறு ஒன்றும் காணப் படவில்லை. நான்கு திக்கும் பார்த்தது. தண்ணீர், தண்ணீர்தான். ஒரு மரம் ஒரு செடிகூட காணமுடியவில்லை. நிலப்பகுதி எங்குமே காணேம்.

பறந்து பறந்து இபபக்கம் அப்பக்கம் போய்ப் பார்ப்போமென்று அப்பறவை தன்னுடைய பெரிய சிறகை விரிதது, கிழக்கு வடக்கு மேற்கு தெற்கு என நான்கு திக்கிலுமபறந்து போய்ப் போய அலைந்தது தான் மிச்சம். யாதொரு பலனும் இல்லை. எங்குமே கரை தென்படவே இல்லை.

கரையைக் காணமுடியாத பறவைக்குத் தன் காலூன்றிச் சிறகுகளை இளைப்பாற்றிக்கொள்ள வேறு எந்த இடமும் கிடைக்கவில்லை. திரும்பத் திரும்ப அந்த அலைமிக்க கடலிடையே, வேகமாகச செல்லும் கப்பலின் கூம்பின் மீதுதான் வந்து அமர்ந்து தன காலகளுக்கும் சிறகுகட்கும் உடலுக்கும் ஒய்வைத் தேடிக்கொள்ளும்.

மனித ஆன்மாவும் இப்படித்தான் இருக்கிறது. உலக வாழ்க்கையிலே, சம்சாரத்திலே - ஜனன மரணமாம் சுழற்சியிலே-ஓய்வின்றி அது உழன்று அலைகின்றது. நமமைச் சுற்றிலும் ஒரே அகண்டமான நீர்ப்பரப்பு எனப் படும் சம்சார பந்தம். இதற்குக்கரை இல்லை. இறைவன் திருவடிகளால் வங்கத்தின் கூம்பிலே சில விநாடிகள் கூடத் தங்காத் மனப்பறவை எண்திக்கும் அலைகின்றது, திரிகின்றது, ஓடிப் பறக்கின்றது. எப்பக்கமும் எத்திக்கும் அதற்குக் கரை தென்படவே இல்லை. பலகாலம் முயன்றும் பயனின்றித் திரும்பவும் வங்கத்தின் கூம்புக்கே திரும்புகின்றது. ஆனல் அங்கும் அது சிறிது நேரம் கூடத் தங்காமல் பழைய வாசனையால் — சுபாவத்தால் மீண்டும் வேறொரு திக்கிலே பாய்ந்து சென்று கரை தென் படுகிறதா? தான் தன் காலூன்றி ஓய்வெடுக்கத் தக்க ஏதாவதொன்று கிடைக்குமா? என்று அலைகிறது.

நிலமீதிலே பறவை இருந்தபோது, மரத்துக்கு மரம் பறநது சென்று தங்கிற்று. மேலே உயர உயரப் பறந்தது. கீழே ஏதாவது எலி செத்துக் கிடந்தால், கீழ் நோக்கிப் பாய்ந்து வந்துதன் அலகால்கொத்திக்கொண்டு போய் மரக்கிளை மீதமர்ந்து தின்றது. அமைதி இல்லாமல் மேலும் கீழுமாக அலைந்தது, பறந்தது.

நம்முடைய ஆன்மப் பறவையும் அப்படித்தான். விஷய சுகங்களில் ஈடுபட அலைகிறது. பொன் பொருள் போகம் புகழ் இவைகளுக்காக ஏங்குகின்றது. தந்தை தாய், தமர், தாரம், மகவு இவைகளிலே அற்ப சுகம்கணடு ஆனந்திக்கிறது. பசித்தவன் உண்கிருன். சில மணி நேரம் கழித்துத் திரும்பவும் அவனுக்குப் பசிக்கிறது. திரும்பவும் உண்கிறுன்.

அதைப் போலவே, ஆன்மாவும் விஷய சுகங்களில் ஈடுபட்டு அவைகளை அடைந்து அவைகளால் திருப்திஅடையாமல், மேலும்மேலும் உலக இன்பங்களை அவாவி நிற்கிறது.

ஆனல் இந்த ஆன்மப் பறவை என்றாவது ஒரு நாள் கடலிலே பயணம் செய்கின்ற கப்பலின் கூம்பினைச் சென்றடையும். மயர்வற மதிநலம் அருளினன எவனவன, அவன் அருளால் அவன் பாதங்களாகிய வங்கத்தின் கூம்பின் மேல் அமரும் பாக்கியம் கிடைக்கும். அப்படிக் கிடைத்த பின்னும் இந்த ஆன்மா தன் பழைய வாசனையினால், எட்டுத் திசையும் பதினாறு கோணமும் எங்கும் பறந்து போய் பதினாறு பேறுகளுக்காக அலைந்து அலைந்து, கரை காணாமல் மீண்டும், அந்த வங்கத்தின் கூம்புக்கே மீளும.

ஆழ்வாரின் இப்பாடலிலே உள்ள 'எங்குப் போய் உய்கேன்' என்னும் தொடரிலே உள்ள ஆற்றாமைதான் ஒவ்வொரு ஆன்மாவுக்கும் தேவைப் படுவதாகும்.

இந்த ஆன்ம ஏக்கமே இறைவன பாத கமலங்களைத் தவிர, மற்றோர் பற்றுக் கோடு நமக்கில்லை என்பதை உணர்த்த வழிகோலும். உன் சரண்

**நலங்கிள்ளி**

அரக்கோணம்,

அல்லால் சரண இல்லை என்னும் உள ளத்துறுதியினை உண்டாக்கும.

இந்த நிகழ்ச்சியை ஆழவார் பாசு ரத்தினல் அறியலாம.

வெஙகண்திண் களிறடர்த்தாய்
விற்றுவக்கோட்டம்மானே
எஙகுப் போய் உயகேன் உன்
இணையடியே அடையல் அல்லால்
எங்கும் போய்க் கரைகாணது
எறிகடல வாய் மீணடேயும்
வங்கத்தின கூம்பேறும மாப்பறவை
போனறேனே

மற்றுமோர் காட்சி.

ஆழ்வார் வயல் வழியே சென்று கொண்டிருக்கிறர். அங்கு விளைந் துள்ள பசுமையான நெற் பயிரோ மழை இல்லாமல் வாடி வதங்கி விட் டிருநதது. ஆழ்வார் தம் உள்ளமோ கருணை நிறைந்த உள்ளம்.வாடிய பயி ரைக கண்டபோதெல்லாம் வருந்து கின்ற உள்ளம். அவருடைய அருள் நெஞ்சம நெகிழ்ந்து பாகாக உருக, அவர் வாய் முணுமுணுத்தது. இந்தப் பசிய நெற்பயிர் — பைங்கூழ் மேலே தவழ்ந்து செல்லும் மேகத்தையல்ல வா அண்ணாந்து பார்த்து "எனக்கு அருள் செய், எனக்கு அருள் செய்" எனப் பிரார்த்திக்கினறது. ஆனல் அநத முகிலோ பசிய நெற பயிரை மறந்து விட்டு, கடல் மீதல்லவா சென்று பொழிகின்றது?

"கதிர் பேறு செந்நெல்வாடக
கார்குலம் கண்டு சென்று
கொதி திரைக்கடலில பெய்யும்"

என்பது சரியாகத்தானே இருக்கிறது. அந்த மேகம்தான் பயிரை மறந்தா லும பயிர் அதனை மறக்கவில்லை' 'நம் மை மறநதாரை நாம் மறக்க மாட் டேமால' என்றல்லவா அது சொல் லாமற் சொல்கிறது.

இந்த முகிலைப் போலவே, முகில் வண்ணு நீ என்னை மறந்தாலும் என் னுடைய மெய்த்துயரைத் தீர்க்கா விடினும், அந்த வாடிய பயிரைப் போன்றுள்ள நானும் என சித்தத்தை உன்பாலேதான் வைத்திருப்பேன். ஏனெனில் நீ ஆண்டான் நான் உன் அடியவன! அடிமை. அதோடு தற சுதநதிர மறறவன்.

"எத்தனையும் வானமறந்த
காலத்தும் பைஙகூழகள்
மைத்தெழுந்த மாமுகிலே
பார்த்திருக்கும் மற்றவைபோல்
மெய்த்துயர் வீட்டாவிடினும்
விற்றுவக் கோட்டமமா என்
சித்தம மிகஉனபாலே வைப்பன்
அடியேனே"

ஸ்ரீ வைஷ்ணவத்திலே, சரணுகதி யும் பிரபத்தியுமே சிறந்த முத்தி நெறியாகும். இநத முறையிலே, வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போனறும் மாமுகிலே பார்த்திருக் கும் பைங்கூழ் போன்றும் சித்தத்தை நாராயணன்பால் வைதத ஆழ்வார், "ஆறுகள் எல்லாமே வேக வேகமாக ஓடி ஆழ்ந்து பரந்த கடலிடத்தே சங்கமமாகி விடுகினறன. அப்படிச் சங்கமமாகாமல் அவை புறம நிற்பதே இல்லே. நிற்கமாட்டா. இதைப் போலவே இறைவா முகில் நிறத்தை உடைய வித்துவக்கோட்டு அம்மானே உன்னுடைய சரணுர விந்தங்களிலே, சரணுகதி அடைந்து விட்டால் எனக் குப்புகலிடம வேறுஉணடோ?" என்று வினவுகிறா.

"தொககிலங்கி யாறெல்லாம்
பரந்தோடி, தொடு கடலே
புக்கினறிப் புறம்நிற்க மாட்டாத,
மற்றவைபோல்
மிக்கிலங்கு முகில நிறத்தாய்
விற்றுவக்கோட்டமமாஉன
புககிலங்கு சீரல்லால புக்கிலன்
காண் புண்ணியனே."

ஆற்றுநீா அனைத்தும் ஓடிக் கடலி டைக் கலந்து விடுகிறது. பின்னா அந்த நீர் ஆற்றுக்குள்ளே திரும்பி வருவதில்லே. இதைப் போலவே, சரணுகதி தததுவததின் மூலம் ஆற்று நீரைப் போல விரைந்தோடிக் சட லின்கண் சென்று அக்கடல நீராய அடங்கிப் பின் மீளாதவாறு போல வே ஸ்ரீமநநாராயணன் திருவடிகளை யே சரணுகச் சென்றடைந்த ஆன்மா மறுபடியும் உலக மாயையிலே சிக்கி உழலாது என்பதை நாம் ஒவ்வொரு வரும் உணர்தல் நலம்.

இதையே சிலஞான சிததியும இப படிக கூறுகிறது.

"முன்னிறை நீர் சிறைமுறிய முடிசிஓடி
முந்நீர் சேர்ந்தந் நீராய்ப்
பினனீங்கா முறைபோல்"

ஆன்மா இறைவனடி சார்ந்தால் உலக மாயைக்குத் திரும்பி மீளா தாம்.



## விண்ணப்பம்

'ஸப்தகிரி' மாத இதழுக்கான தொகையை 'மணியாாடா' மூல மாக அனுப்புதல் பயனுள்ளதாக அமையும். மணியார்டர் கூப்பனில் தங்கள் முகவரியினை ஆங்கிலத்தில் எழுதுவதும், பழைய சந்தாதாரராக இருந்தால தங்கள் சந்தா எண்ணை மறக்காமல் குறிப்பதுவும 'ஸப்த கிரி' திருவாகப்பணியினை எளிதாக அமைக்கும். தொகை அனுப்பியும் இதழ் பெறுதவர்கள, தாங்கள் எழுதும் புகார்க்கடிதத் தில் மணியார்டர் எண்,செய்த தொகை, அனுப்பிய தேதி ஆகிய விவரங் களுடன் தங்கள் முழு முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொண் டால் விரைவில் செயலாற்ற உதவும். சந்தாதாரர்களின் முழு ஒத் துழைப்பையும் எதிர்பார்க்கிறேம்.

— ஆசிரியர்.

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

ச்ருதி வாக்யங்களால் பூமி முதலான பூதங்களுக்குப் பரமாத்மாவினால் நியமிக்கப்படுந்தன்மை அறியப்படுதலாலும், 'ஜனங்களின் உள்ளே புகுந்து தூண்டுமவன் எல்லாவற்றுக்கும் ஆத்மாவான பரமாத்மா' (தை. ஆர-3-11) என்றும், 'எவன் ஆத்மாவின் மேலிருப்பனும் அதன் உள்ளேயுமிருக்கிறானோ, எவனை ஆத்மா அறியமாட்டாதோ, எவனுக்கு ஆத்மா சரீரமாகிறதோ, எவன் ஆத்மாவினுள்ளேயிருந்து அதைத் தூண்டுகிறானோ' (ப்ருஹ-5-7-22) என்றும், 'சோம்பலையும் தூககத்தையும தன் வசத்தில் வைத்திருக்கும் அர்ஜுநனே, எல்லாப் பிராணிகளின், ஹ்ருதயத்திலும் நான் ஆத்மாவாக இருக்கிறேன்' (கீதை 10-20) என்றும், 'ஹே அர்ஜுநா ஈசவரன் எல்லாப் பிராணிகளுடைய ஹ்ருதயத்திலும் இருந்து கொண்டு, சரீரமாகிய யந்த்ரத்தில் ஏறியுள்ள அவ்வெல்லாப் பிராணிகளையும் ஸத்வரஜஸ்தமோமயமான ப்ரக்ருதியினால் சுழற்றிக் கொண்டிருக்கிறான்' (கீதை 18-61) என்றும் இவை முதலிய ச்ருதிகளாலும் ஸ்ம்ருதிகளாலும் சித்து எனப்படும் உயிர்களுக்குமுட்படப் பரமாத்மாவின் வசப்பட்டிருக்குந் தன்மை அறியப்படுவதனாலும், பரமாத்மாவைத் தவிர வேறொருவர்க்கும் சுதந்திரத்தன்மை இல்லாமையாலும்-என்க. பரப்ரஹ்மமோவெனில், பிறர்க்கு வசப்பட்டதல்ல; 'அவனை நியமிப்பவன் ஒருவனுமில்லை' (தை-நாரா. 1-9) 'அவன் உலகிற்குக் காரணம், இந்திரயங்களைச் செயல் படுத்துகிற ஜீவாத்மாவுக்கும் தலைவன் அவன், அவனை உண்டாக்குமவன் யாருமில்லை, அவனுக்குத் தலைவனும் யாருமில்லை' (ச்வேதா 6-8) 'எல்லாப் பொருள்களையும் தன்வயத்தில் வைத்திருப்பவன், எல்லாவற்றையும் உள்ளே புகுந்து நியமிப்பவன்' (ப்ருஹ. 6-4-22) என்றிவை முதலிய ச்ருதிகளாலும் பிற ஸ்ம்ருதிகளாலும் அந்தப் பரப்ரஹ்மம் பிறர்க்கு வசப்படாததாகவும் வேறொரு தலைவனையுடையதல்லாததாகவும் அறியப்படுகின்றது. ஆகையால் சுதந்திரத்துவமென்பது பரப்ரஹ்மத்திற்கேயுரிய தன்மையாகும். அத்தகைய இச்சுதந்திரத்துவமானது யுத்த காண்டம் நூற்றிருபதாவது ஸர்க்கத்தில் 'நீர் மூவுலகிற்கும் ஆதி கர்த்தாவாகவும் சுதந்திரராகவும் இருக்கிறீர்' (8) (20) என்று இரண்டிடங்களில் முறையே தேவர் அனைவரும் கூறியதாகவும் பிரமன் தனியாகக் கூறியதாகவும் காணப்படுகிற இது இராமனாக அவதரித்த விஷ்ணுவுக்குப் பரப்ரஹ்மத்துவத்தைச் சாதிக்கின்றது.

வைச்வரூப்யாத் — விச்வம் ரூபம் யஸ்ய ஸ: —விச்வரூப:,தஸ்ய பாவ:, தஸ்மாத்—என்ற வ்யுத்பத்தியின்படி (=பொருளையறிவிக்கும் ஆற்றலின் படியே) உலக முழுவதையும் தனக்குச் சரீரமாகக் கொண்டுள்ளமையால் — என்பது இதன் பொருள். ஸகல ஜகத்தையும் தன்னுடலாகக் கொண்டுள்ளமையென்னும் இத்தன்மை பரப்ரஹ்மத்திற்கேயுரியதென்ற விஷயம் முன்னமே மூதலிக்கப்பட்டபடியால் இங்கு மறுபடியும் விளக்கப்படவில்லை. பரப்ரஹ்மத்திற்கேயுரித்தான இத்தன்மை நூற்றிருபதாம் ஸர்க்கத்தில் 'உலகமெல்லாம் உனது உடலாகும், பூமியின்கண் உள்ள திண்மையென்னும் குணம் உன்னுடையதாகும்'(27) என்றவிடத்தில் விஷ்ணுவின் அவதாரமாகிய இராமபிரானிடம் கூறப்பட்டதாய்க்கொண்டு அது அப்பிரானுக்குப் பரப்ரஹ்மமாந்தன்மையைச் சாதிக்கிறது.

நிகிலஜகத்ஸம்ஹ்ருதே: — எல்லாவுலகையும் ஸம்ஹரிப்பதனால் (அழிப்பதனால்) என்பது இதன் பொருள். ஸகலலோகத்தையும் அழிப்பது பரப்ரஹ்மத்திற்கே உரியதொரு தன்மை

## காணக் கண் கோடி வேண்டும்!

அனுமன் வீணை மீட்ட, பரதன் வெண்குடைப் பிடிக்க, இலட்சுமணன் வில்லைத் தாங்க, சத்ருக்கனன் சாமரம் விச, இராஜ மஹரிஷிகள் வேதம் ஓத, விண்ணோர்கள் பூமாரி பொழிய, விபீஷணன், வானரங்கள் வணங்கி நிற்க ஸ்ரீராமரும் சீதையும் ஏக ஆசனத்தில் அமர்ந்து பட்டாபிஷேக திருக்கோலத்தில் விளங்கும் மெய் சிலிர்க்க வைக்கும் மங்களகரமான காட்சியைத் திருக்குடந்தை ஸ்ரீராமர் கோயிலில் கண்டு கண் குளிரச் சேவிக்கலாம்.

ஆர். சுப்பாராவ்.

## நான் அறிந்த தத்துவம்

நீலமேக சியாமள வண்ணமும், கரத்தில் புல்லாங்குழலும், இடையில் தரித்த பொன்னிற பீதாம்பரமும், கோவைப் பழம் போன்ற சிவந்த உதடுகளும, தாமரைக் கண்களும், பூர்ணசந்திர வதனமும் கூடிய ஸ்ரீகிருஷ்ணனைத் தவிர வேறு தத்துவம் ஒன்றும் நான் அறியேன்.

— ஸ்ரீ மதுசூதன சரஸ்வதி சுவாமிகள்.

தகவல் : திருக்கோவலூர் ஆர். சுப்பராவ்.

என்னும் விஷயம் 'யதோவா இமாநி' என்று தொடங்கும் ச்ருதியில், 'யத்ப்ரயந்தி அபிஸம்விசந்தி' (மரணமடையும் பிராணிகள் எதுதன்னில் லய (நாச)மடைகின்றனவோ) என்று ப்ரப்ரஹ்மத்திற்கு லயகாரணத்வம் கூறப்படுவதுகொண்டு அறியவெளிதாகும்.

அதனால்தான் அத்த்ரதிகரணத்தில் (ப்ரஹ்மஸூத்ரம் 1,2, 9—12 ஸூ) 'எவனுக்கு ப்ராஹ்மணன் க்ஷத்ரியன் முதலிய சரங்களும் அசரங்களுமான இவ்வுலகமானது அன்னம்-உணவு ஆகிறதோ, எவனுக்கு யமன் (உலகையுண்பதற்கு உதவுகின்ற) ஊறுகாய் ஆகிறானோ, அத்தகைய பரமாத்மாவை இத்தன்மையுடையவனென்று உண்மையாக அறிபவன் யார்' (கட-2-15) என்ற கடவல்லீச்ருதியில் உணவு ஊறுகாய் என்றிவற்றால் குறிப்பாகக் காட்டப்பட்ட உண்பவனானவன் ஜீவாத்மாவா பரமாத்மாவா என்ற ஸந்தேகம் வர, உண்ணுதலென்பது நல்வினை தீவினைகளின் பயனாகிய சுக துக்கங்களையனுபவித்தலேயாகையால் அவ்வினைகளின் தொடர்புள்ள ஜீவாத்மாதான் உண்பவன் என்ற கேள்வியை எழுப்பி,ஸகலசராசரங்களையும் உண்பதென்பது ப்ரஹ்மத்திற்கன்றி மற்றொருவருக்குப் பொருந்தாமையாலும் ப்ரஹ்மத்தினிடம் ஸகல சராசரங்களையும் அழித்தலென்னும் உண்ணுதல் பொருந்துவதனாலும், கீழ்க்காட்டிய ச்ருதியில் உணபவனாகக் கூறப்பட்டது ப்ரஹ்மமேயென்று, ஸகலசராசரங்களையும் ஸம்ஹரித்தல் ப்ரஹ்மத்திற்கே உரிய தன்மையாவதை இசைந்து சித்தாந்தம் செய்யப்பட்டது.

அத்தகைய இந்த ஸகல ஜகத்ஸமஹாரகாரணத்துவம் அந்த ஸர்க்கத்திலேயே ''எல்லாவுலகிற்கும் முதற்காரணமாகவும் அப்யயமாகவும் (=லயஸ்தானமாகவும்) உபேந்திரனாகவும் மதுசூதநனாகவும் நீர் இருக்கிறீர்'(20) என்றவிடத்திலும், 'பகைவரைத் தபிக்கும் இராமபிரானே, உலகின் உற்பத்திக்கு முன்னும் உலகின் அழிவிற்குப் பின்னும் யோகிகளால் நீர் காணப்படுகிறீர்'(9)என்றவிடத்திலும் இராமனை விஷ்ணுவுக்குச் சொல்லப்பட்டதாய்க்கொண்டு அது அப்பெருமானுக்குப் பரப்ரஹ்மத்துவத்தைச் சாதித்துத் தருகிறது. இவற்றுள் முதலிலுள்ள 'அப்யய:, என்ற சப்தத்தால் 'அப்யேதி அஸ்மிந ஜகத் இதி—அப்யய'' என்ற வ்யுத்பத்தியின் மூலமாக எல்லாவுலகிற்கும் லயமடையும் ஸ்தானமாயிருத்தலென்பது அறிவிக்கப்பட்டு, அதிலிருந்து ஸகலலோகஸம்ஹார காரணத்வம் கிடைப்பதனாலும், இரண்டாமதில் உலகமனைத்தும் அழிந்த பின்பும் இருத்தலென்பது போதிக்கப்படுதலால், உலகின் உற்பத்திக்கு முன்பிருத்தலென்பதனால் ஸ்ருஷ்டிகாரணத்வம் அறிவிக்கப்படுவதுபோன்று அழிவிற்குப் பின்பிருத்தலென்பதனால் ஸம்ஹாரகாரணத்வம் அறிவிக்கப்படுதலால் ஸகலலோகத்தையும் அழிக்குந்தன்மை கிடைத்தலாலும் இவ்விரண்டு வசனங்களும் விஷ்ணுவுக்கு ஸகலலோகத்தையும் ஸம்ஹரிக்குந்தன்மையைப் போதிப்பனவாகக் கொள்க.

(தொடரும்)

---

6-ம் பக்கத் தொடர்ச்சி

அமுதமான திருமகள் பிறந்ததாகவும், அத்திருமகளை வைகுந்தத்திலிருந்த திருமால் திருக்கண்ண மங்கையில் மணம் புரிந்து கொண்டார் என்றும், இதனால் தேவர்களும் கடவுளரும் அமிர்த புட்கரணி எனும் இத்திருக்குளத்தையும்அமர்தவல்லித் தாயாரையும் இத்தலத்தில் கண்டு வணங்கினர் என்றும் கூறப்பட்டுள்ளது. மேலும் ருத்திரன் பிரம்மனின் ஒரு தலையைக் கொய்ததால் ஏற்பட்ட பிரம்ஹத்தி தோஷத்தைப் (12000 ஆண்டு தோஷம்) போக்க இத்திருக்குளத்தில் நீராடி, பெருமாளைப் பூஜித்ததால் தோஷம் நீங்கப் பெற்றதாகவும், கிருத யுகத்தில் பிரம்மன் இவ்விறைவனை வணங்கி வேதம் பயின்றதாகவும், திருதேயுகத்தில் பிருகு மகரிஷி வணங்கி மோட்சம் பெற்றதாகவும், துவாபர யுகத்தில் புருவஸர் பயன் பெற்றதாகவும், கலியுகத்தில் சூரியன் இங்கு வணங்கியதாகவும், சோமனும் மார்க்கண்டேயரும் முக்தி பெற்றது இத்தலத்திலே என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

நான்காம் பகுதியில் (செப்பேட்டின் இரண்டாம் பக்கம் கடைசி பகுதி அச்சுத விஜய ரகுநாத நாயக்கரால் சகம் 1530, கலி 4709 (கி.பி. 1608) சௌமிய வருஷம் பங்குனிமாதம் 18 ஆம் நாள் வியாழக்கிழமை இராம நவமியன்று இத்திருக்கோயிலில் தாரை வார்த்து அளிக்கப்பட்ட 60 வேலி நிலங்கள் பற்றிய அனைத்து விபரங்களும் குறிப்பிடப்பட்டுள்ளன.

மேலும் இத்தர்மத்தைக் காப்பவர்கள் அடையும் பலனும், தர்மத்தை அழிப்பவர்கள் அடையும் பாபங்களும் கூறி, சந்திரன்,சூரியன். வானம், மலைகள், காவிரிநதி உள்ள வரை இத்தர்மத்தை பின்பு வருபவர்கள் போற்றுங்கள் என்ற இம்மன்னனது உருக்கமான வேண்டுகோளும் கூறி, இச்செப்பேட்டை செதுக்கிய ஆச்சாரியின் ஊரும் பேரும் குறிப்பிடப்பட்டுள்ளது.

இராமபிரானின் சேவகனாகவே இறுதி வரை வாழ்ந்து வரலாறு படைத்த அச்சுத விஜய இரகுநாத நாயக்கனின் சாதனைகள் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய பெருமையுடையவையாகும்.

(28-ம் பக்கத் தொடர்ச்சி)

அதன் பெருமைய உலகறியச் செய். நீ சுவைத்து அமர வாழ்வு பெற்ற இராம நாமம் எனும் அமுதை அனைவரும் சுவைக்கும் வண்ணம் செய். நீ ரிஷியாகுய்' என்று கூறிச் சென்றனர்.

இதுவே வால்மீகியைப் பற்றிய இதிகாசம். பாகவதத்தில் ஜடபரத ரின் மூன்று பிறவிகள் சொல்லப்பட் டிருப்பது போன்றே வால்மீகிக்கும் இங்கு தொடர்ந்து மூன்று பிறவிகள் கூறப்பட்டிருக்கின்றன. இங்கு பிறவி கள் என்றால் என்ன பொருள்?

ஒருவர் கடுமையான நோய்க்கு ஆட்பட்டு, தீவிர சிகிச்சைக்குப் பின் குணமானுன் என்று கொள்வோம். நாம் என்ன சொல்வோம்?' 'அப் பாடா! இவன் மறுபிறவியே எடுத்து விட்டான் ஐயா!' என்று சொல் வோம். ரோகம் நீங்கி தந்நிலை அடை வதையே இவ்விதம் கூறுகிறோம்.

ரோகார்த்தஸ்ய ரோக நிவ்ருத்தௌ
ஸ்வஸ்ததா |
துக்காத்மகஸ்ய ஆத்மனோ த்வைத
ப்ரபஞ்ச உபசமே ஸ்வஸ்ததா ||

இரட்டைகளால் நிரம்பிய உலக விவகாரங்களினின்று ஒழிவடைந்து சாதகன் தன்னிலை யறிந்து, தன்னில் நிலை பெறுதலாகிய யோகமே ரோக நிவிருத்தியும் மறுபிறவியுமாம். இதி காசம் வரலாறு அல்ல. ஆதலால் நாம் அனுபவிக்கும் பிறப்பு இறப்புகளை இங்கு ஏற்றிக் கூறக்கூடாது. உப நயனம் செய்யும் போது ஒருவனுக்கு புதிய பெயர் சூட்டி, இவன் மறு பிறவி பெற்றுள்ளான், த்விஜன் என்று சொல்கிறோம். இங்கு ஒருவன் இறந்தா பிறக்கிறுன்? ஒருவன் உப தேசத்தால் பெறும் மேல் நிலையையே இவ்வாறு சொல்கிறோம். 'ஸோபான பங்க்தி ந்யாயேனே'. சாதகன் படிப் படியாக முன்னேறி வரும் அனுபவ நிலைகளே பல பிறப்புகளாகவும் யுகாந்திரங்களாகவும் சொல்லப் படும். மெய்ஞானத்தின் விஞ்ஞான விளக்கங்கள் அல்லவா நமது சாஸ் திரங்கள்.

இங்குக் கூறப்பட்ட வால்மீகியின் மூன்று பிறவிகளும், ஒருவனது ஞான சாதனப் பயிற்சியின மூன்று நிலை களான பக்தி யோகம், கர்ம யோகம், ஞான யோகம் இவற்றை முறையே சொல்லா நிற் கின்றன. முதல் பிறவியில் கூறப் படும் 'ஸ்தம்பன' என்ற பெயர் புலனடக்கத்தைக் குறிக்கும். 'ஸகலா' என்ற நகரில் இருக்கிறுன் என்பது இந்த புலனடக்கம் முழுமையாயில்லை என்பதையே குறிக்கும். நற்குண நங்கையை மனைவியாகப் பெற்றுன் என்பது சாதகன் தொடர்ந்து புரியும் உபாசனத்தைக் குறிக்கும். தாசி யோடு குலாவிக் கொண்டிருந்தான் என்பது, இவனிடத்து ஞான நாட் டத்தையும் மீறிய உலக இச்சை களின் பாலுள்ள நாட்டத்தைக் குறிக்கும். இது முதல் நிலையில் சாதகன் செய்யும் உபாசனம்.

இரண்டாவது பிறவியில் 'வ்யா தன்' என்று சொல்லப்படும் வேடன் எப்போதும் கொடிய மிருகங்களை வேட்டையாடிக் கொண்டிருப்பது போல், இந்நிலையில் உபாசனத்துடன் கர்மத்தையும் சேர்ந்து பயிலும் சாத கன், சித்த சுத்தி பெற வேண்டி, ஸதா தன் புலன்களுடனும், அவற் றின் விஷயங்களுடனும் போராடிக் கொண்டிருக்கின்றுன், பூரண வெற்றி யைக் குறித்து முன்னேறிக் கொண் டிருக்கின்றுன் என்பதையும், உலக இச்சைகளின் ஈர்ப்பு சக்தி இன்னும் இவனிடம் தன் கைவரிசையைக் காட்டிக் கொண்டிருக்கின்றது என் பதையும் அறிகிறோம்.

மூன்ருவது பிறவியில் தபஸ்வியான கிருணு என்ற யோகிக்கும், பாம்பிற் கும் பிறந்தான். தொய்விலா ஊக்கத் துடன் முயன்று வந்த சாதகனிடத் தில் இம்மூன்ருவது நிலையில் குண்ட லினி சக்தி எழுந்து விடுகின்றது. கிருணு என்ற சொல் ஓவியனைக் குறிக்கும். 'சித்ர தீபம்' போல் அதிஷ்டானமாகிய பிரம்மம் என்ற திரையில் சாதகன உலகை வரைந்து காண்கிறுன். இங்கும் இவன் வேடர் களில் ஒருவனுக வாழ்ந்தான் என்பது புலன்களுடன் அதன் விஷயங்களுடன் இவன் நடத்தும் தொடர்ந்த போராட்டத்தைக் குறிக்கிறது. ஒரு அந்நிய ஸதிரியை மணந்து கொண்டு பெருங் குடும்பியாய் வாழ்ந்தான் என்பது புலனிச்சைகளின் ஆதிக்கத் தைச் சொல்லும். தீனி போட்டுக் காக்கும் போது புலன்கள் இவனைக் கைவிடுமோ!

இந்நிலையில் சாதகன் ஸப்த ரிஷி களைச் சந்திக்கிறுன். அதாவது ஏழு பிரகிருதிகளையும் கண்டறிகிறுன். 'ஸப்த ப்ரக்ருதயோ ஹ்யேதா: ||'ஒரு வன் யோக சாதனையில் அறிய வேண் டிய ஏழு பிரகிருதி தத்துவங்களே ஸப்த ரிஷிகள் என்று சாந்தி பாவம் கூறும். இவர்கள் 'இராம' நாமத்தை 'மரா' என உபதேசித்தனர்.

இத்யுக்த்வா ராம தே நாம
வ்யத்யஸ்தாக்ஷரபூர்வகம் ||
ஏகாக்ரமநஸா அத்ரைவ மரேதி ஜப
ஸர்வதா ||

'ரா' என்ற அக்ஷரத்தால் சொல் லப்படும் பிரும்மத்தை அறியுமுன் 'ம' என்ற அக்ஷரத்தால் சொல்லப் படும் மாயையைப் புரிந்து கொள்ள வேண்டும். எனவே 'மரா' என்பது முறையான தியான யோகத்தைச் சொல்கிறது. 'மகாரோ அப்யுத யர்த்தத்வாத் ஸ மாயேதி ச கீர்த் யதே'.

ரகாரோ வஹ்நிவசன: ப்ரகாச: பர்ய
வஸ்யதி |
ஸச்சிதானந்த ரூபோ அஸ்ய பரமாத்
மார்த்த உச்யதே ||

ஆயிரம் யுகங்கள் தவத்திலிருந் தான் என்பது பலகாலும் யோகத் தில் ஈடுபடும் மனநிலையைக் குறிக் கும். யோகியின் வாழ்வே 'யுகம்' என்ற பதத்தால் சொல்லப்படும். பிராணிகளைப் போன்று வாழும் மனி

தர்களின் வாழ்வு யுகக்கணக்கில் அடங்காது.

தியானம் பயின்று, ஸமாதி நிலை பெற்று, குண்டலினி சக்தி விழிப் புற்றுக் கிளம்பி, சித்தம் தூய்மை பெற்று சாதகன் முழுமையாக ஞான வாழ்வில்புகுவதே,ஞானேதயத்துடன் புற்றிலிருந்து எழுந்தான் என்று சொல்லப்படுகிறது. ஞானுதிததனு கிய பரமான்மாவோடு லயமடைவது ஒன்றுதான் எஞ்சியிருக்கிறது. இப்போது சாதகன் வால்மீகி யாகி விட்டான்.

மேலே கூறிய மூன்று நிலைகளையும் தொகுத்துக் காணுங்கள். இராமாயணம் நடத்த என்ன என்ன தகுதிகள் வேண்டும் என்பது நன்கு விளங்கும்.

வால்மீகியான சாதகன் நாரதர் எனப்படும் மஹத் தத்துவத்தின் மூலமே க்ஷேத்ரஞ்ஞுகை இருக்கும் ஸப்த பிரம்மமான ஆத்மா இராமனை அறிய முடியும். இதைத்தான் முதல் சுலோகம், 'தவம், வேத அத்யயனம் இவற்றோடு எப்போதும் கூடியவரும், வேத மறிந்தவர்களுள் சிறந்தவரும், முனிவர்களில் சிறந்தவருமான நாரதரை தபஸ்வியான வால்மீகி பிரச்னம் செய்தார்', என்று கூறுகிறது.

தபஸ்வாத்யாய நிரதம் தபஸ்வீ வாக் விதாம் வரம் |
நாரதம் பரிபப்ரச்ச வால்மீகோ முநி புங்கவம் ||

பரம சேதனனுகிற பசியனுயிருக்கிற ஞானப் பசி கொண்ட சாதகன், ஆசாரய முகத்தாலே கேட்கும் 'ச்ரவணம்' என்ற சிறுநெல் பொற்றுக்கி, வேதாந்தமாகிற உரலில் இட்டு உபதேசமாகிற உலக்கையால் குத்தும்போது தேகாத்ம அபிமானமாகிற உமி கழிகிறது. நெலலைப் பலமுறை குத்துவதாகிற மனனத்தால் இநத உமி நீங்குகிறது. ச்ரவண மனனத் திற்குப் பின் நிதித்யாஸனமாகிற சுளகால் விவேகம் எனப்படும் கொழித்தல் செய்யப்படுகிறது. சுளகு எனப் படும் முறத்திலிட்டுக் கொழிக்கும் போது முறத்தின் அடிப்பகுதியிலிருக்கும் நெல்லைக் கழித்து, நுனிப்பகுதியிலிருக்கும் குருணையைக் கொழித்து நடுப்பகுதியில் இருக்கும அரிசியை எடுப்பது போல், அகங்கார மமகாரமாகிற அடிக்கழித்து, அன்ய சேஷத்வ ஸவஸ்வாதந்தர்யமாகிற நுனி கொழித்து சேதனனுகிற அரிசி எடுத்துக் கொள்ளப்படுகிறது. இந்த அரிசியும் தவிடோடு சேர்ந்திருக்குமாகையாலே சிவந்திருக்கும். ருசி, வாசனை கைளோடு சேர்ந்திருக்கும்

இந்த சேதனனுகிற அரிசியை தவிடு போகும்படி மறுபடியும் முன் கூறியவாறே குத்தி சேஷத்வ ஞானமாகிற வெளுப்பை உண்டாக்குகிறுன்.

இங்ஙனம் சித்த சுத்தி பெற்ற சேதனன், இவனிடத்து இன்னமும் சூக்ஷ்மமாக ஒட்டிக் கொண்டிருக்கின்ற ஸாதனுனந்தரங்களாலே உண்டாகியிருக்கும் தடிப்பாகிற அழுக்கை, அரிக்குஞ் சட்டியிலே நீரிட்டு அரிசியைக் களைந்து அரித்து எடுப்பது போல, அத்யவஸாயம் எனற அரிக்குஞ் சட்டியில் பிரபத்தியாகிற நீரை வார்த்து நீக்குகிறுன். மேலும் பிரயோஜனுனந்தரங்களாகிற கற்களையும் முழுவதுமாக அரித்து எடுத்து விடுகிறுன்.

பின் இவன் சேதனனுகிற அரிசியை பரபகதியாகிய பானையிலிட்டு, பர ஞானமாகிற உலைகட்டி, பகவத் அனுபவமாகிற அடுப்பிலே ஏற்றி, பரமனிடத்திருந்து தனனைப் பிரிப்பதாகிற நெருப்பையிட்டு, புண்ணிய பாவங்களாகிற விறகை எரித்து, எம்பெருமானை அறிய வேண்டுமென்ற த்வரையாகிய ஊது குழல் கொண்டு ஊதி, பிரிவாற்ருமையாகிற கொதி கொதித்து, பரம பக்தி எனும் (ஞானம்) பொங்கும் பக்குவ நிலையை சாதகன் சேதனனுகிற அவ்வரிசிகை விளைவிக்கிறுன்.

இந்நிலையில் சாதகன் சூக்ஷ்ம சரீரமாகிற கரிக்கலத்தோடு யோக மார்க்கத்திலே ஸுஷும்னையாகிற வாசலாலே புறப்பட்டு அர்ச்சிராதி மார்க்கத்தால் வைகுநதமாகிற மச்சிலேற்றி, அப்ராகிருதமான பொற்கலத்தோடு 'அஹமநநம,அஹமநநம்' என்ற சோறறையிட்டு, 'அஹமந் நாதோ, அஹமந்நாதோ' என்று புஜியா நிற்கிறுன். இவனே வால்மீகி. முதலியாண்டான மேற்கூறிய வண்ணம் நாமும் யோகம் பயின்று, நாரத உபதேசம் பெற்று, இராமனை யறிந்து, இராமாயணம் நடத்துவோம்.

வால்மீகி படைக்கும் தெவிட்டா ஞான அமுதைப் பருகுவோம். அமர வாழ்வு பெறுவோம் ★



ஸ்ரீ சங்கராச்சார்யா கோயில் - கன்னியாகுமரி.

திருமதி. எம். ராஜலட்சுமி.

# திருச்சானூரில்....

மீனம்

(திருமலை வேங்கடவனின் நாயகியாம் அலர்மேல் மங்கை அல்லது பத்மாவதி தேவி கோயில் கொண்டு, பக்தர்களுக்கெல்லாம் அருள்பாலித்து வரும் திருச்சானூர் அல்லது அலர்மேல் மங்காபுரம், திருப்பதி நகருக்குச் சற்றே தென் கிழக்கில் ஏறத்தாழ இரண்டரை மைல் தொலைவில் அமைந்துள்ளது.

வைணவ வழக்கின்படி, திருமலை செல்லும் யாத்திரிகர்கள் இங்குத் தாயாரைச் சேவித்த பிறகே வேங்கடேசுவரரைத் தரிசிக்க வேண்டும் என்பதாக ஓர் ஐதிகம் இருப்பதாகச் சொல்லப்படுகிறது.

அங்கு ஆண்டுதோறும் கார்த்திகை மாதம் நடைபெறும் பிரம்மோற்சவமும் பஞ்சமி தீர்த்தத் திருவிழாவும் பெரிதும் பிரசித்தி பெற்றவை.

திருச்சானூரில் பத்மாவதி தேவியின் புகழ் வாய்ந்த கோயிலைத் தவிர, வேறு சில ஆலயங்களும் உள்ளன. அவற்றுள் ஒன்றான சூரிய நாராயண சுவாமி கோயில் பற்றிக் கூறுகிறது இக்கட்டுரை.)

" ஆதித்யானாம அஹம் விஷ்ணு:,
ஜ்யோதிஷாம ரவி: அம்சுமான்"

"ஆதித்யர்களுள நான் விஷ்ணுவாகவும், ஒளியுடன கூடிய கோள்களுள நான் சூரியனாகவும் இருக்கிறேன்."

திருச்சானூர் பேருந்து நிலையத்திலிருந்து இடதுபுறமாகச் சென்று ஊரினுள் நுழைந்தவுடன் தென்படுவது பத்மாவதி தேவியின் தங்க ஆலய விமானமும், நீராழி மண்டபத்துடன் கூடிய திருக்குளமும். 'பத்ம ஸரோவரம்' என்றழைக்கப் பெறும் இத் திருக்குளத்தின் கிழக்குக் கரையில், எடுப்பான தோற்றம் எதுவுமின்றி, தீர்த்தவாரி மண்டபத்திற்கு எதிராக அமைந்துள்ளது சூரிய நாராயண சுவாமியின் திருக்கோயில்.

கோயிலுக்குள் செல்வதற்குமுன் தலபுராணத்தைச் சற்றே பார்க்கலாமே.

முன்பு ஒரு சமயம், வைகுந்தத்தில் பாம்பணை மேல் பள்ளி கொண்டிருந்த விஷ்ணுவின் மார்பின்மீது பிருகு முனிவர் தமது காலால் உதைத்தார். அப்போது, தான் உறையும் இடத்தைக் காலால் உதைத்த முனிவரைக் கடிந்து கொள்ளாதது மட்டுமின்றி, அவருக்குக் கால் நொந்ததோ என மனமுருகி வினவி அவரை உபசரித்த விஷ்ணுவின்மீது வெகுண்டு, இலக்குமி வைகுந்தம் விட்டகன்றாள். திருமகளின் பிரிவைத் தாங்க முடியாது வருந்திய விஷ்ணு அவளைத் தேடியலைந்து, திருச்சானூர் வந்து அங்கு ஒரு குளத்தை வெட்டினார். அதிலுள்ள தாமரைக் கொடிகள் நன்கு புஷ்பிக்கும் பொருட்டு, குளத்தின் கிழக்குக் கரையில் சூரிய நாராயணனின் திருப்படிமத்தை நிறுவி, அவரும் அக்குளக்கரையினில் பன்னிரண்டு ஆண்டுகள் கடுந்தவம் புரிந்தார். தவத்தின் இறுதியில் திருமகள் தாமரை மலர் ஒன்றின்மீது தோன்றி, விஷ்ணுவுடன் இணைந்தாள். திருச்சானூரில் சூரிய நாராயண சுவாமியின் திருவுரு தோன்றியதற்கான புராணச் சான்று இதுவே.

பாற்கடல் பாவை, தனனை வெளிப்படுத்திக் கொள்வதற்கு வசதியாகத் தாமரைப் பூக்கள் மலர்ந்திட உதவி புரிந்த ஒளியின் தேவனுக்கு ஒதுக்குப்புறமாய் அமைந்திருக்கும் கோயிலின் வெளிப்புறக் கம்பிக்கிராதியின்மீது 'சூரிய நாராயண சுவாமி கோவில்' என்னும் அறிவிப்புப் பலகையைப் பார்த்துக் கொண்டு உள்ளே நுழைகிறோம். ஏறத்தாழ நாற்பது அடி நீளமும் இருபத்தைந்து அடி அகலமும் கொண்டிருக்கின்றது கோயில்.

திறந்த வெளி முற்றத்தைத் தாண்டியவுடன், ஒரு முன் மண்டபம். இடது புறம் ஒரு பகுதி ஒரு சிறு அறையாக அமைந்துள்ளது. முன் மண்டபத்தின் நடுவில் 16 பட்டைகளுடன் கூடிய கற்றூண்கள் இரண்டு உள்ளன. அவற்றை அடுத்து ஒரு சுவர். அதிலுள்ள வாயிற்படியைத் தாண்டியவுடன் முக மண்டபத்திற்கு வருகின்றோம். முக மண்டபத்தின் நடுப்பகுதியில், சதுரம் ஒன்றின் மூலைகளில் அமைந்திருக்கும் நான்கு கற்றூண்கள் காணப்படுகின்றன. சிறப்பான வேலைப்பாடுகளோ கலை வடிவங்களோ அவற்றின்மீது இல்லை. இன்னும் சற்று உள்ளே சென்றால், இரு கற்றூண்களுக்கிடையில் அமைந்துள்ள இரு கதவுகளுக்கடுத்தாற் போல், நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிக்கின்றார், சூரிய நாராயண சுவாமி. உயரமான, எடுப்பாக விளங்கும் திருமேனி. தாமரை மொட்டுகளை ஏந்திய இரு புஜங்கள். மனத்தைக் கவரும் திருமுக மண்டலம். நெற்றியில் மணிகளினாலான வடகலை நாமம். கமலங்களை மலரச் செய்யும் ஒளி பொருந்திய திருமுகம். வந்தனம் செய்து வலம் வருகையில் திருச்சுற்றின் வடது புறம் மடப்பள்ளி. மீண்டும் சந்நிதிக்கு வந்து வணங்கும்போது, சந்நிதிக்குச் சற்றே வெளியே அமர்ந்து கொண்டு 'ஆதித்யஹ்ருதயம்' பாராயணம் செய்து கொண்டிருந்த இளம் அர்ச்சகர் எழுந்து, சூரிய நாராயண சுவாமிக்குக் கற்பூர ஆரத்தி செய்து நமக்குப் பிரசாதம் வழங்குகிறார்.



ஸ்ரீ பத்மாவதித்தாயார்.
ஊஞ்சல் சேவை - திருச்சானூர்.

'இச்சந்நிதியில் ஆதித்யஹ்ருதயம, சூரிய காயதரி, மூலமநதரம் ஆகிய வற்றைப் பலமுறைசொலவதுபெரும் பயனைத் தரவல்லது. கோயிலின் முன்புறத்தில் இருமருங்கிலுளள கடைகளை அப்புறப்படுத்தி, ஒளிமிக்க விளககுகளை அமைதது, கோயிலின சுற்றுப்புறத்தைத் தூய்மைப்படுத்தி, கோயில் பற்றிய சிறப்புச செய்தி களைத் தெரிவிககும் அறிவிப்புப பல கைகளை அமைத்தால், பக்தாகளுக்குப் பயனுள்ளதாயிருககும். திருவாரா தனததிற்குத் தேவைப்படும் தீர்த் தத்தைக்கூட் வெளியிலிருநதே கொணடு வர வேணடியிருககிறது. கைஙகரியததிற்கு வேணடிய தீர்த தம கோயிலின உள்ளேயே கிடைகக வழி செய்ய வேணடும. இககோயில் திருமலை திருப்பதி தேவஸ்தானத் தாரின் ஆளுகையினகீழ் இருப்பதால் இவற்றை எலலாம செய்வதில் சிரமம் ஏதும இராது' என்று இள நகையுடன் தன உள்ளத்தின் ஆழத் திலிருந்து தன் உள்ளக்கிடக் கைகளை வெளிப்படுத்தும போது, அவருடைய உணமை யான விருப்பங்கள நிறைவேற சூரிய நாராயண சுவாமி அனுக்ரகிக்க வேணடும் என நாமும பிராாத்திக கிறோம.

இங்குள்ள சூரிய நாராயண சுவா மிககு ஞாயிறு தோறும் முறைப்படி அபிஷேகம் நடைபெறுகிறது. மாா கழி முதல் நாளன்று தொடஙகி 41 நாடகள் தினசரி திருமஞசனம செய் யபபடுகிறது.

ஆணடுதோறும திருச்சானூரில் திருமணஙகள நடநத வணணம இருககினறன. தனியார் மற்றும தேவஸதானத்தாா நடத்தும் திரும ணககூடஙகள பல இங்கு உணடு. திருமணத்தின்போது நடைபெறும மாப்பிளளை அழைப்பு என்பது சாதா ரணமாக இந்தச் சூரியநாராயண சுவாமி கோயிலில் வைத்தே நடத் தப்பெறுகின்றது.

கோயிலிலிருந்து வெளியே வநது தென்புறத்திலிருநது மேலே பார்த் தால், சநநிதிககு மேலே விமானம இருப்பது தெரிகிறது. அணமையில் பழுதுபார்ககபபட்டிருக்கிறது. முக மணடபத்தின் மேற்புறம் நான்கு மூலைகளிலும் சிமம உருவங்கள் சாயந்த மரிந்த நிலையில் அமைக்கப் படடுளளன. கோயில சிறியதேயாயி னும், துபபுரவாக உள்ளது நம் மன ததைக கவருகிறது.

இககோயில பறறிய வரலாற்று விவரஙகள சில. கி. பி. 19ஆம் நூற்ருணடின துவக்கததில் (கி. பி. 1819) ஆஙகிலேயரின் ஆடசியின கீழ தயாரிக்கப் பெறற தி. தி. தேவஸ் தான வினு-விடைப பட்டியலில் (ஸவால்-ஜவாபபடடியில்) இககோயி லுககுச சர்ககாரிலிருநது படி ஏதும கிடையாது எவறும், இககோயிலுக கான இனும நிலம திருப்பதி கோதண்டராமஸ்வாமி ஆலய அர்ச சகரான பட்டு தாதாச்சாரியா என் பவரின் அநுபோகத்தில் இருந்தது எனறும் அவருடைய குமாஸ்தா ஒரு வரே தினமும் ஒரு முறை இநதக் கோயிலில் பூஜை செயது வநதாா எனறும் கணடுள்ளது இப்போதும இககோயிலில் பூஜை செய்யும் உரிமை திருப்பதி கோதணடராம ஸவாமி ஆலய அர்சசகர்களைச் சேர்நததாகவே உளளது.

எனினும, ஏறததாழ அதே சமயத தில (கி. பி. 1819) தயாா செய்யப் பட்ட 'பைமாயிஷி கணககு'ப்படி, பத்மஸரோவரததின கிழககுககரை யில், சூரியநாராயணசுவாமி, வேங்க டேசுவரா ஆகியோருககுக கோயில் கள இருநதன எனறும, இரணடும மேற்கு நோககி இருநதன எனறும், வேங்கடேசுவரர் கோயில் 24 தூண களுடன 39 அடி × 24 அடி × 12 அடி அளவுள்ளதாய நலல நிலையில் இருநதது எனறும் தெரிகிறது. ஆனல், இதில் குறிபபிடப்பட் டுளள வேங்கடேசுவரர் கோயில் பற்

றிய விவரம் எதுவும் இப்போது தெரியவில்லை.

ஃ ஃ ஃ

சூரியநாராயணசுவாமி கோயிலை ஒட்டினாற் போல் கிழக்கு நோக்கிச் செல்லும் தெருவிற்குத் தென்புறம் ஒரு சிறு கோயில் அமைந்துள்ளது. விநாயகர் கோயில் என்று அது அழைக்கப்படுகிறது. இக்கோயிலைப் பற்றி மேற் கூறப்பெற்றுள்ள 'ஸவால் — ஜவாப் பட்டி'யிலோ, 'பைமாயிஷ் கணக்கிலோ' எவ் விவரமும் கிடையாது. செவிவழிச் செய்தியின்படி, இது நிரம்பவும் அண்மையில் நிறுவப்பட்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. எனினும், யாத்திரிகா பலரும் இதற்குச் செல்கிறார்கள். எனவே, இக்கோயிலைப் நாம் சிறிது தெரிந்து கொள்வதில் தவறு ஏதும் இல்லை.

ஆறு அல்லது அதிகபட்சம் ஏழு அடி அகலம்; முப்பத்தைந்து அடி நீளம். நுழைந்தவுடன் திறந்த வெளி முற்றம். அதை அடுத்த முகப்புச் சுவரின் மீது நின்ற திருக்கோலத்தில் விநாயகர் சுதை உரு; சுவரின் இரு மூலைகளிலும் சிம்ம வடிவங்கள். இரண்டுமே வண்ணங்கள் பூசப்பெற்று விளங்குகின்றன. முகப்புச் சுவரில் உள்ள திறப்பின வழியாக உள்ளே சென்றதும் பதினைந்து அடி நீளமுள்ள ஒழுங்கை. அதை ஒட்டித்தான் மணிக்கதவங்களுடன் கூடிய அர்த்த மண்டபமும் அதை அடுத்துக் கர்ப்பகிரகமும் அமைந்துள்ளன. கோயில் மேற்கு நோக்கி உள்ளது.

கர்ப்பக்கிரகத்தில் நடுவில் ஸ்ரீமந் நாராயணமூர்த்தி அமர்நத திருக்கோலத்தில் காட்சி தருகிறார். இடதுபுறம் லக்ஷ்மிதேவி. கர்ப்பகிரகத்தின் தெற்குப் புறச் சுவரில் நித்திய சூரிகளுள் ஒருவரின் சிலை வடிவம் வடக்கு நோக்கி இருக்கின்றது. நாராயணமூர்த்தியின் வலது புறம் விநாயகர் நின்ற திருக்கோலம். நல்ல சிலை வடிவம். முன்னே விநாயகரின் உற்சவ விக்கிரகம். விநாயகரின் உற்சவ விக்கிரகத்திற்கு இடதுபுறம் ஸ்ரீதேவி, பூதேவிகளுடன கூடிய ஸ்ரீநிவாஸர் உற்சவத்திருவுருவங்கள். சற்றே முன்பாக, சேஷ சயனத்தில் சந்தான கோபால விக்கிரகம் குழந்தை வடிவில். இவ்விக்கிரகமும் பஞ்ச லோகத்தில் உருவாகியிருக்கிறது.

இது தனியார் கோயில். பத்மாவதிதேவி கோயில் அர்ச்சகர்களுள ஒருவரைச் சேர்ந்தது. இக்கோயிலிலுள்ள சிலை வடிவங்கள் திருச்சானூருக்குத் தெற்கே ஓடும் சுவர்ணமுகி ஆற்றில் தாம்போதிப்பாலம் அமைக்கும்போது ஆற்று மணலில் கண்டெடுக்கப்பட்டதாகவும் அவற்றை இந்தக் கோவிலில் அமைத்ததாகவும் ஒரு தகவல். இச் சிலை வடிவங்களுடன் அகழ்ந்தெடுக்கப்பெற்ற ரங்கநாதர், நாச்சியார் சிலைகள் திருச்சானூருக்குள் நுழையும் இடத்திற்கு இடதுபுறம் இன்றும் தெருவோரமாகக் கிடக்கின்றன.

இக்கோயிலிலுள்ள சந்தான கோபால விக்கிரகம் தெற்கு தேசத்திலிருந்து கொண்டுவரப்பட்டதாகக் கூறப்படுகின்றது. ஆயினும், குழந்தை இல்லாத தம்பதிகள் இங்குப் பிரார்த்தனை செய்துகொண்டால் குழந்தைப் பேறு பெறுகிறார்கள் என்று ஒரு வழக்கு உள்ளது. குழந்தை பெற்ற தாய் தந்தையர் இங்கு வந்து நேர்த்திக்கடன் செய்வதும் நடைமுறையில் இருப்பதாகச் சொல்லப்படுகின்றது. நம் விருப்பங்களை நிறைவேற்றும் தெய்வத் திருவுருவங்கள் வணங்கப் பட வேண்டியவைதாமே!

## சந்தாதாரர்களுக்கு....

31-12-87—ம் தேதியுடன முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். ஆங்கிலத்தில் கடிதத் தொடர்பு கொள்ளவும்.

10 19 26 28 முதல் 32 வரை 35 37 38 49 57 61 62-65 68 72 104 113 118 126 130 132 137 142 145 147 148 150 152 154 165 204 242 250 251 252 255 257 முதல் 263 265 266 268 269 271 முதல் 276 280 282 424 427 435 439 440 441 443 445 446 447 450 451 452 455 456 457 459 462 465 466 467 469 முதல் 478 480 484 503 585 586 587 588 590 591 593 594 597 598 600 முதல் 603 850 851 853 856 859 862 871 872 873 முதல் 880 884 முதல் 890 893 894 895 897 முதல் 900 903 முதல் 908 910 முதல் 913 914 915 918 919 920 922 924 முதல் 929 932 933 934 936 937 939 940 942 944 முதல் 960 2237 முதல் 2241 2243 முதல் 2255 2257 2258 2259 2261 முதல் 2270 2272 முதல் 2275 2278 முதல் 2309 2311 2312 2313 2315 முதல் 2373 2375.

# ஸ்ரீ வேங்கடேசப்பெருமாள் பிரதிஷ்டை



பிரதிஷ்டை செய்யப்பட்ட ஸ்ரீ வேங்கடேசப்பெருமாள்

பெரிய நம்பிகள், இராமானுஜர் போன்ற மகான்களால் அபிமானிக்கப் பெற்றதும், ஏரிகாத்த இராமன் கோயில் கொண்டு எழுந்தருளியிருப்பதுமான தொண்டைமண்டலம் மதுராந்தகத் திவ்விய க்ஷேத்திரத்தில் தேரோடும் திருவீதியில் ஸ்ரீதேவிதாஸனால் அமைக்கப்பெற்றுள்ள ஸ்ரீவைஷ்ணவி தேவி ஆலயத்தில், ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் பஞ்சலோக விக்கிரகப் பிரதிஷ்டை பிரபவ ஆண்டு புரட்டாசி வெள்ளிக்கிழமை உத்தராட நட்சத்திரம் சித்தயோகம் கூடிய நன்னாளில் துலா லக்கினத்தில் காலை 9-40 மணிக்கு ஆகம விதி முறைப்படி சிறப்பாக நடைபெற்றது.

இவ்விக்கிரகம் திருமலை - திருப்பதி தேவஸ்தானத்தினரால் பிரத்தியேகமாய் நிர்மாணிக்கப்பெற்று, ஐம்பது சதவீதத் துகை நன்கொடையாகத் தேவஸ்தானத்தினரால் ஏற்கப்பட்டு திருமலை ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் அநுக்கிரகத்துடன் மேற்படி ஆலயத்திற்கு அளிக்கப்பட்டதாகும் எனபது குறிப்பிடத்தக்கது.

1—10—87 வியாழன் மாலை, கும்பகோணம் ஸ்ரீமான் ப. ராமஸ்வாமி பட்டாச்சாரியரின் தலைமையில் ஸ்ரீ வைஷ்ணவதேவி கோயில் மணி மண்டபத்தில் பிரதிஷ்டை சம்பந்தமான பூஜைகள் துவங்கின. ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள் பஞ்சலோக விக்கிரகத்தை எழுந்தருளச் செய்து, அனுக்ஞை, உதகசாந்தி, ம்ருத்ஸங்க்ரஹணம், நவதான்யபாலிகா பூஜை, அங்குரார்ப்பணம், வாஸ்து சாந்தி ஹோமம், திக்பந்தனம், ரக்ஷாபந்தனம் மஹாகும்பத்தில் ஆவாஹனம், மஹா கும்ப பூஜைகள், அக்னி பிரதிஷ்டை, புதிய ஸ்ரீநிவாஸப் பெருமாளுக்கு ஸ்நாபனதிருமஞ்சனம், ரக்ஷாபந்தனம், ஜலாதிவாஸம், நயனோன்மீலனம், மஹாகும்ப பூஜைகள், தத்வ ந்யாஸ ஹோமங்கள். தசவாயு ந்யாஸ ஹோமங்கள், ப்ராண பிரதிஷ்டை ஹோமங்கள், பூர்ணாகுதி, இரவு எம்பெருமானுக்கு சயனாதிவாஸம் ஆகியன நடைபெற்றன.

2—10—87 வெள்ளிக்கிழமை, காலை மஹாகும்ப பூஜைகள் ஹோமம், பூர்ணாகுதிகள், யாத்ரா தானம், கிரஹப்ப்ரீதி முதலியன நடைபெற்று, 8-40 மணிக்கு ஸ்ரீ வெங்கடேசப்பெருமாள் ஆவாஹனம், ப்ராணபிரதிஷ்டை ஆகி, மங்கள வாத்தியங்கள் முழங்க, வேதகோஷமும் திவ்வியப்பிரபந்தமும் ஒலிக்க, திரளான பக்தர்கள் பரவசமடைய ஸ்ரீ வைஷ்ணவிதேவியின் கருவறையில் விக்கிரகச் சம்பிரதிஷ்டை நடந்தேறியது.

அன்றுமாலை ஸ்ரீ வைஷ்ணவிதேவி ஸ்ரீ-வேங்கடேசப்பெருமாள் திருக்கல்யாண உற்சவம், ஊஞ்சலாடுதல், மாலை மாற்றுதல், திருஷ்டி கழித்தல் முதலிய வைபவங்களுடன் நடைபெற்ற காட்சி கணணுக்கு விருந்தாய் மனத்திற்கு நிறைவாய் அமைந்திருந்தது.

கோயில் முழுதும் விசேஷ ஒளி விளக்குகளுடனும் வாழை, மாவிலைத் தோரணஙகளுடனும் அலங்கரிக்கப் பெற்றிருந்தது. அரியதோர் காட்சி ஆனந்தமான சாட்சி ஆக இது விளங்கிற்று என்றால் அது மிகையாகாது.

தகவல்: ஏ. நடராஜன்.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

